உ

பரமபதிதுணை.

# அகஸ்தியமகாமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

சகல கலைக்ஞான மென்று வழங்குகிற

# அமுத கலைக்ஞானம்

## ஆயிரத்திருநூறு.

இஃது

மதுரை யானைக்கல்தெரு வித்துவான்

மு. குழந்தைவேலுப்பிள்ளை அவர்கள்

ஓலையேட்டுப்பிரதியின்படி,

சரிபார்த்து,

மதுரைப் புதுமண்டபம் புத்தகஷாப்

இ. ராம.

குருசாமிக்கோனார்

அவர்களால்,

சென்னை

வாணி விலாசம் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

1928

இதன்விலை] — [ரூ. 1--8--0



உ

குமாரகுருபரன்றுணை.

அகஸ்தியமகாமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

சகல கலைக்ஞானமென்று வழங்குகிற

# அமுதகலைக்ஞானம் 1200.



## காப்பு.

ஆதிபரா பரத்தினுடகிருபைகூர்ந்து-அப்பனே மனோன்மணியைத்தொழுது போற்றிச், சோதியெனுங் கமலமலரமுதங்கொண்டு- சுந்தரம்போல் வாதத்திலட்சங்காப்பு, நீதிபெறவைத்தியத்திலிரண்டுலக்ஷம் நிலைத்ததொருசூத்திரத்திற் கோடாகோடி, வாதியென வந்தோர்க்கும் பெரியோருக்கும் மனமகிழ்ந்து கருக்குருவாய்வசனித்தேனே. 1

## நூல்வகை.

வசனித்தேன் காவியந்தா னாயிரத்திருநூருக்குள் வண்மையுள்ள சகலகலைக் ஞானமெல்லாம்,•நிசனித்தேனாயிரத்தி யிருநூறுக்குள் நிச்சயமாய்க் கருக்களெல்லாமிதிலேசொன்னேன், திசனித்தமந்திரங்கள் சக்கரங்கள் தீட்சையொ றக்குவைப்புச் செந்தூரங்கள், பசனித்த பற்பவகைமெழுகுஜெயநீர் பாங்கானதாம்பிரமும் சிமிட்டுப்போக்கே.

போக்கானயந்திரமாமயேந்திரசாலம் புதுமையுள்ள அஞ்சனமும் வசியப்போக்கும், நீக்கான பறைப்போடு திலதப்போக்கும் நேரான மோடியிலே யனந்தப்போக்கும், வாக்கான பலிதமுள்ள கருவின்போக்கும் வஞ்சனைகள் பில்லியுட மார்க்கப்போக்கும், தாக்கானசரியையொடு கிரியைப்போக்குந் தன்மையுள்ளயோகமுடன் ஞானமாமே.

ஞானமுடன் தேகசித்திக்கற்பக்கூறு நலமானதீட்சைமுதல் தியானப்போக்கும், ஊனான காயாதி கற்பப்போக்கும் உண்மையுள்ள முப்பூவின் கருவின்போக்கும். தேனானமதியமுதஞ் சமாதிகற்பஞ் சிந்தைமன தோன்றான அஷ்டபந்தங், கோனான குருவினுட கருணைபெற்றுக் கூறினேன் பன்னிரண்டுநூறுந்தானே. 4

தானென்ற பன்னிரண்டு நூறுக்குள்ளே சகலகலைக் ஞானமெல்லா மடக்கிப்பாடித், தேனென்ற மொழிபோலே விந்தநூலைச் சிக்கெனவே சமாதிதனில் வைத்தேனப்பா, நானென்றஆணவத்தால் சித்தர் கூடி நலமாகவந்தார்க ளொடுக்கந்தன்னில்,, கோனென்ற என்குருவே பூரணமேஐயா கும்பமுனி சரணமென்றுகூறினாரே. 5

கூறினசொல்லைதனவே யென்றநாளும் குணமாக வந்தோர்க்கு ஆசனங்கள்போட்டு, மீறினதுவதனவே கேட்டேனப்போ விளம்பினது ஆயிரத்தி யிருநூறுக்குள், தேறினது செகத்தோர்கள் கண்டாரானால் சிவசிவாகைலாச மிடங்கொள்ளாது, கோறினது என்னவையாவென்றுகேட்டார் குணமானசித்தருக்கா மென்றுசொன்னேன். 6

சொன்னவுட னடிபணிந்து சித்தரெல்லாந் துன்மார்க்க ருலகத்தோர் கண்டாரானால், என்னவையா வுலகமெலாஞ் சித்தாய்ப்போகும் இதற்குநீசாபமது ஈவாயீவாய். உண்மையுள்ள இந்நூல் சித்தர்கட்கேயாம் உலகிலுள்ளோர்க் கிந்நூலைச்சித்தரீந்தால், நன்மைபெற வுதறிறல் செந்தீப்பற்றி நடுக்கமுடனவன்சிரசு தெறித்துப்போமே. 7

பொமென்று சொன்னவுடன் சித்தரெல்லாம் புகழான இந்நூலைப்பதனம்பண்ணி, நாமென்ற ஆணவத்தை ஒடுக்கிக்கொண்டு நலமான இந்நூலைக் குகைக்குள்வைத்து, தேனென்ற அமுதப்போ லெடுத்துப்பார்த்து சிவசிவாமறுபடியும் குகைக்குள்வைத்துக் கோனென்ற குருவைப்போ லிந்தநூலைக் குருநூல்போலவரவர்கள் பணிந்திட்டாரே. 8

## நூல் பதனஞ்செய்ய.

பணிந்திட்ட இந்நூலைப் புலத்தியாகேள் பார்தனிலே யொருவருக்கும் பகரவேண்டாம் கனிந்திட்டபூஷணம்போ லிந்நூல் மைந்தா கருவான பொருளெனவே கருத்துள்வைத்து, துணிந்திட்டமனப்போலே குருவைக்காரு சொல்லாத பூரணத்தில்சொக்கியேறு, அணிந்திட்டவாசியினு லறிவைப்பற்றி அரகராபூரணத்தி லருள்தான்பாரே.

அருளான குருபதத்தை யழுத்திப்பாரு அழித்திமுனை பார்க்கையிலே யருள்தான்காணும், இருளான மாயைதனையறுத்துநீயும் இன்பமுள்ளபூரணத்தை யியல்பாய்க்கொண்டு, மருளானபுத்திதனை யறுத்துத்தள்ளு மதியானசந்திரனை கருத்திற்சேரு, உருவான பூரணத்திலுறிமைவைத்து உண்மையுடன் பூரணத்திலுன்னிப்பாரே. 10

## பூரணமகிமை.

உண்ணுவது எவ்விடமென்றுகந்துகேளு உண்மையுடன்சொல்லுகிறே னுனக்காய்மைந்தா, நண்ணுவது அகாரமடாஐயாஐயா நலமான அகாரமொடு உகாரம்ரெண்டும், சொன்னபொரு ளிவையுமொன்றாய்க்கூடும்போது துருவமுள்ளஓங்காரம் நீதானச்சு, இன்னமொன்று சொல்லுகிறேன் புலத்தியாகேள் இரவிபதிபற்றவிடம் நீதானச்சே. 11

நீயென்ற சொல்லதுதா னொன்றுக்கால் நிச்சயமாய்ச் சொல்லுகிறேன் புலத்தியாகேள், கோனென்றகுருவாகுந் திருவுமாகுங் குருவிருக்குமாயிரத்தெட் டிதழுமாகும், தேனுகுமமிர்தரசப் பூரணமேயாகுஞ் சிதம்பரத்தின் சூக்ஷாதிசூக்ஷமாகும் ஊமென்றநாதமுடன் விந்துவாகும் உண்மையென்ற பொருளாகும் ஊமையாமே. 12

ஊமையென்ற பொருளேது ஐயாஐயா உண்மையுடனெந்தனுக்கு வுரைக்கவேணும், ஆமையென்ற அகாரமடா உகாரம்ரண்டும் அருள் பெருகிக் கூடினது மவுனமாகும், சீமையெங்குந்திரிந்ததனல் மவுன மாமோ சிவாயகுரு தேசிகனைக்கண்டாற்காணும், தூமையென்றசொல் லதினல் ரோஷம்பெற்ற துரோகியிடஞ்சொல்லாதேநூலைப்பாரே.

நூல்பார்த்தால் பூரணநூல்தன்னைப்பாரு நுண்மையுள்ள தீட்சை யதி னுணுக்கம்பாரு, கால்பார்த்துஎழுதங்குக் கருவைப்பாரு கருத்து வைத்து இந்நூலைக்கருவாய்ம்பாரு, சேல்பார்த்துக் கொள்வதற்குஆயி ரத்தைப்பாரு சிவசிவாஎந்தனுட பட்சணியைப்பாரு, நாள்பார்த்துக் கொள்வதற்கு ஜோஸ்யம்பாரு நன்மைபெற வேணுமென்றாற் குருவை க்காரே. 14

குருவான பதியறிந்து குருவைக்காரு குருவறிந்துபூரணத்தைக் குணமாய்க்கொள்ளு, திருவிருந்துபூரணத்தைத் தினமுங்கொண்டால் சிவசிவாகயிலாசதேகமாகும், மருவிருந்த ஆபிரத்தெண் மலருக்குள் ளே மகத்தான அமுதமது கசிந்துகாணும், சருவானஅமுதமதைக்கொ ண்டால்மைந்தா காயசித்தியோகமுடன் வாதமாமே. 15

## வாதத்திற்குக் கருவுரைத்தல்.

வாதமப்பாபிலப்பதற்கு கருவைக்கேளு மகத்தானபூரணத்தைமரு விப்பாரு; சேதமப்பா வொருநாளுமில்லைபில்லை சிவஞ்சத்திஇரண்டை யுமே தினமுநோக்கி, பேதமப்பா ஒருநாளும் நினைக்கவேண்டாம் பில த்தபுத்தி அறிவதனல் பேணிப்பாரு, நாதமப்பா நின்றநிலை தன்னைப் பாரு நயமாக இந்நூலைக் காருகாரே. 16

இந்நூல்தா னுபிரத்தி யிருநூறுக்குள் இன்பதுன்பமிரண்டையு நானெழுதிவைத்தேன், சொன்னதொரு நூல்களுக்கு இந்நூல்தானுஞ் சுத்தமுள்ள குருநூலாய்த் தொழுதுபோற்று, நன்னயமா யிந்நூலையா ர்க்கீந்தாலும் நான்சொன்ன சாபமது பலிக்குமப்பா, தன்மையுள்ளபுல த்தியனே யோகவானே தகையினுலிந்நூலைப் பதனம்பண்ணே. 17

பண்ணப்பா அடிமூலமேலாதாரம்பாங்கானகுண்டலியி லங்கென் றிட்டு, விண்ணப்பாமேல்மூல மாருதாரம் மெய்யானமவுனத்தைமேவி யோட்டு, கண்ணப்பாசுழிமுனையில் கடுகவுண்ணுகற்பூரதீபமதைக்கரு த்தாற்சேவி, உண்ணப்பா அமுதத்தை யுண்ணுவுண்ணு உன்தேகம் விளக்கொளிபோற் சித்தியாமே. 18

சித்தியப்பா அடிமூலமேலாதாரஞ் சென்றங்கேசதாசிவத்தின்தீட் சைகூடிப், பத்தியுடன்ரேசக பூரகம்பண்ணிப்பதியான கும்பகத்தில் நின்றியானல், எத்திசையிலுள்ள அதிசயங்களெல்லாம் ஏகாந்தமாக நீயறிந்துகொள்வாய், புத்தியுள்ளபுலத்தியனே சொல்லக்கேளும் போ தமென்னபூரணமேசத்தியமாமே. 19

சத்தியமேதவறாமல் நினைக்கவேணுந் தன்மையுண்டாய்த்தருமத் திற்றிரியவேணும், பத்தியுடன் பெரியோரைப்பணியவேணும் பதரு ம்றசாபசித்திபண்ணவேணும், புத்தியுடன்பூரணத்தைக்காணவேணும் பூரணமேசெல்வமென்று புகலவேணும், சித்தியுள்ளசிதம்பரமேஅம்ம யமாய்த்தோன்றுஞ் சிவசிவாஎன்னசொல்வேன் பூரணத்தின்செயலே.

## சிதம்பரச் சக்கரமகிமை.

செயலானசிதம்பரத்தின் மகிமைகேளு சிறக்கவேஆறுவரை நே ரேகீறி; மயமானஆறுவரைகுறுக்கேகீறி மைந்தனேயிருபத்தைந்தறை யுமாக்கு. தயவானநமசிவய வென்றுபோட்டுத்தன்மையுடனடுவணையை ப்பிடித்துமாறு, சுயமானசிதம்பரத்தி னடனங்காணுஞ் சொல்லுவார் நடனசபை யென்றுபாரே. 21

பாரப்பாசிவாயநம யென்றுபோட்டுப் பாங்காகநடுவணையை ப்பிடித்துமாறு, நேரப்பா நின்றகயிலாசந்தன்னில் நிச்சயமாய்க் கனகசபை நேரேதோற்றும், காரப்பா அதில்மனதை வைத்துக்காரு கனகமது உனக்குநிகருண்டோபிள்ளாய், கூரப்பா யநமசிவ வென்றுபோட்டுக் குணமாக நடுவணையைப் பிடித்துமாறே. 22

மாறப்பா யான்சொன்னபடியேபார்த்து மகத்தான புலத்தியனே சொல்லக்கேளு. ஆரப்பாஉனக்கிடுதில்லைராஜர் அன்புடனே யெதிராக நிற்பார்பாரு, காரப்பா அவர்பதத்திற் றெண்டெண்ணிக் கனிவாகத் தியானித்தாலப்பாகேளு, கூறப்பாவுன்மனதில் நினைத்ததெல்லாங் கூர் மையுட னீந்திடுவார் குருவைப்போற்றே. 23

## பஞ்சாட்சரமாற.

போற்றப்பா நமசிவய வென்றுபோட்டுப் புகழாக நடுவணையைப் பிடித்துமாறு, நீற்றமுள்ள சிதம்பரமே நீயேயாவாய் நீன்மையுடன் மந்திரங்க ளெல்லாஞ்சித்தி, வாய்த்திரிவுஇல்லையடா மனமேசெம்மை வசியமுதலஷ்டசித்து மகிழ்ந்துஆடும், பூத்தமலர்வாசனைபோல் பிரகா சிக்கும் பூரணத்தைப் பிறவாதே புனிதமாமே. 24

புனிதமாய்வயநமசி யென்றுபோட்டுப் பூரணத்தில் பற்றிமனதறி வில்நின்றால், இனிதமுள்ளகாயசித்தியாகுமாகும் இன்பதுன்பமிரண்டி ஹட இயல்புகாணும், அனிதமுள்ள பீடையெல்லாம் விலகிப்போகும் அரனருஞ் சிவனுமையு மன்பாவீவார், மனிதனென்ற பேர்போச்சு மகாத்மாவாச்சு மாநிலதநில்நீயுமொரு முனியாவாயே. 25

முனியான அஞ்செழுத்தும் நமசிவயமாகும்முதன்மையுள்ள அஞ் செழுத்துக்குயிரைக்கேளு. தனிவானசிதம்பரமே அல்லாதுண்டோ தானவனாய் நின்றதொருபூரணமேயாகும், கனிவானபூரணத்தைக்கண் டால்முத்தி கற்பமெனக் கொண்டாக்கால் காயசித்தி, மனியானமனோ ன்மணியாம் நமசிவயமென்று மைந்தனே மாறினதால்சித்தியாமே. 26

ஆமப்பா சிவத்தினுட கூறுசொன்னேன் அப்பனேசத்தியுட மார்க்கஞ்சேளு, நாமப்பாசொல்லுகிறே மூக்கோணவட்டம் நன்மையுடன் நாற்பத்து மூன்றுமாச்சு, தாமப்பாநாலுபத்து மூன்றுக்குந்தான் சங்கையுடன் சிதம்பரத்தை நன்றாய்நாட்டி, காமப்பால்கானற்பாலிரண்டுங் கொண்டு கருவேற வுருவேறக் கருத்திலாணே. 27

ஊணப்பாசத்தியுடபூசையாச்சு ஓகோகோ சிவத்தினுடபூசையாச்சு, பூணப்பாசிவசத்தி இரண்டுங்கண்டு புனிதமுடன் மனதறிவால் நின்றுகொண்டு, காணப்பா காலேசிவ மாலேசக்திக் கருணையுடனிருவரையும் பூசித்தாக்கால், நானப்பாசொல்துகிறேன் சித்திமுத்திநன்றான யோகமுதல் வாதமாமே, 28

ஆமப்பா அகமறியார் சண்டிமாண்பர் அறுசுவையின் விவரமதையறியாமூடர், நாமப்பாவென்று அகம் புகுதாமாண்பர் நன்மையுள்ள பூரணத்தைபறியாமாண்பர்; காமப்பால்கானற்பால் காணுமாண்பர்கன்மவினை தீராதகமூதைமாண்பர், வாமப்பால் வகையறியா மடையர்மெத்த வஞ்சருடன் சொல்லாதே மனதைப்பாரே. 29

## பூரணதரிசன மகிமை,

மணமானபூரணத்தை யார்தான்காண்பார் மகத்தானகுருசொல்ல அறியவேணும், இனமானவாசியைபத்தாணுர்தான்காண்பார் இயல்பான யோகிசொல்ல அறியவேணும் குணமான குண்டலியைக் கண்டால் மைந்தா குருவானபதிதலத்திற் கூடலாகும், கனமானகண்டமதி லங்கென்றேட்டுக் கருத்துறவே குறியைமெள்ளக்கருதிப்பாரே. 30

பார்க்கவென்ன தீபவொளி பளிச்சென்றேதான் பண்பாக காணுமம்போ கண்தான்கூசும், மார்க்கமுடன் கண்கடுத்துக் கூசிற்றுனல் மருட்டிமெள்ளவுருட்டியே குறியிலேறு, ஏற்கையுடனிப்படியேயபழக்கமானல் என்னசொல்வே நந்திப்பிரகாசமப்பா, சேர்க்கையுடன் அகாரம்உகாரம்ரெண்டுந் தினந்தோறுஞ் செபித்தவனே சித்தனமே. 31

## காலவளவுகூறல்.

சித்தனு யிருப்பதற்கு அகாரதீட்சை செபித்திடுவாயாண்டொன்றிற் றவறுமற்றான், முற்றுதலாய்த் தினந்தோறும் பழக்கமானல் மூலத்திலக்கினிதான் முயன்றுகாணும், பற்றுதல்விடாதபடி நின்றுபானல் பாலனேமூலவன்னி அகன்றுபோகும் அற்றுகடா அசதியெல்லாமகன்றுபோகும் அறுசுவையின் வீரெல்லாமகன்றுபோமே. 32

போனபின்பு உகாரத்தை மருவியேறு புத்தியுட ணுண்டொன்றியதின்மேல்தானும், ஆனபின்பு நீர்கடுத்து வெட்டைமீறும் ஆக்கைதனில் வாய்வுநின்று பித்தமீறும், ஊன்சுவையில் மனம்வெறுத்து திகைத்துக்காட்டும் உத்தமனேயிப்படிநீ யிருக்குதென்று,கோணருனேப்புலத்தியனே விட்டிடாதே கொண்டுமெள்ளவேற்றிவிடு வினையில்லாதே;

வினையான பீடையது பிலத்துதானால் வேணபடி கற்பமதை விரு ம்பியூட்டு, சுணையான சுணையெல்லா மோடிப்போகுஞ் சுந்தரம்போலு ன்தேகந் துலங்கும்பாரு, முனையானசுழிமுனைமேல் வாசியேற்று மூவு லகும்காணுதற்கு முனைமேல்நில்லு, துணையானசற்குருவைத்தொழுது போற்று தொழுகைவிட்டுத் தொழுதாக்கால் மனமேயாமே. 34

பேய்பிடித்துச் சாத்திரத்தை யுலகத்தோர்கள் பேணியேபடித்தி டுவார் குருவைக்காணார், வாய்பழுத்த நாய்போலே யுலகத்துள்ளே வணக்கநெறியறியாமல் மாண்டுபோனார், நோய்பிடித்த சித்தர்கள்தான் நரந்தமுண்டு நோக்கியேயவர்களிடம்பேசவேண்டாம், தாயறியாப்பிள் ளையிடஞ்சேரவேண்டாம் தன்மையுடன் பூரணத்தை போக்குவாயே.

## சடாட்சர மகிமை.

தன்மையுடன் சடாக்ஷரத்தின் மகிமைகேளு தயவாகஅறுகோண மிட்டுநன்றாய், உண்மையுடன் ஓம்நமசிவாயமென்று வுறுதியுள்ளகோ ணமதி லுகந்துபோடு, நன்மையுடன்சரவணபவவென்றேதான் நாட்ட டாகோணமதின் சுற்றில்தானே, உண்மையுடன்வட்டமிட்டுச்சூலமிட்டு உள்விந்துதானெழுதி யோகம்போடே. 36

போட்டவுடன் ரேசகபூரகமும்நண்ணிப் புனிதமுடன் கும்பகத் தில் நின்றுகொண்டு, நாட்டமுடன் மனதுரைத்துச் செபித்தாயானால் நலமானமுருகனுமே பிரகாசிப்பான், தேட்டமுட னவர்பதமேபணிந்து போற்றுச் சிவாயகுருதேசுகமேசிவமேஐயாபூட்டுமுனைத் திறவுகோல் திறக்கவென்று புனிதமுடன் தாவெனவே தருவார்பாரே. 37

## விநாயகசக்கரம்.

பாரப்பா கணபதியுன் திறத்தைக்கேளுபாங்ானமுக்கோண மிட் டுக்கொண்டு, நேரப்பா அதினடுவே ஓங்காரம்போட்டு நினைவாக அதி ன்நடுவேயோகம்போட்டுக், காரப்பாசதாசிவத்தை கருத்திலூணிக் கருணையுள்ள கணபதியே நமாவென்றேதான் கூரப்பா குருபதத்தில் நின்றுகொண்டு கூர்மையுடன்செய்திடவே வருவார்பாரே. 38

பாரான கணபதிதான் பிரகாசித்தால் பாங்காக அவர்பதத்தைப் பணிந்துபோற்றி, நேராகநின்றநிலை தன்னைக்கண்டு நினைவுடனேகேட் டதெல்லா மீவார்பாரு, கூரானகுண்டலிதான் பிரகாசித்தால் குணமா ன அஷ்டதிக்குங் கைக்குள்ளாகும், வீரானபுத்திகளுஞ் செம்மையா கும் வேண்டுவதுக் கிவர்திறந்தான் வேணும்பாரே. 39

## மானதபூசை.

பாரப்பாமானதமாம் பூசைகேளு பருவமுடன் கால்முகங்கள் சுத் திபண்ணிச், சேரப்பாவிபூதியைத்தான் உத்தளமாய்ப்பூசிச் சித்தமன தொன்றாக அறிவிற்பூண்டு, சேரப்பாநின்றநிலை தவறாமற்றான் ரேசக மாய்ப் பூரணத்தை நினைவாயோட்டிக் காரப்பாகும்பத்தில் நின்றாயா னால் கருணையுள்ள சிவபூசை கோடியாமே. 40

கோடியென்றுலெத்தனையோ கோடிகாணுங் -கூர்மையுள்ள மான
குமாம் பூசைநேர்மை, பேடிகளாய்த் திரிந்ததினால் வருவதேது-பெண்
மயக்கங் கொண்டதினாற் காண்பதேது, நாடினதாய் நன்றாக நாடவே
ணும்-நாட்டிலுள்ள தபோதனரை வணங்கவேணும், வாடிமனந் திரிந்
ததனா லொன்றுகாணாப்-வஞ்சரிடம் சொல்லாதே மவுனம்பாரே.

மவுனமென்ற பொருளதிலே மனத்தையூணு-மனதாகப் பூரணத்
தை வணங்கிநில்லு, கெவுனமுடன் பூரணத்தில்நின்றாயானால்-கௌடா
அஷ்டசித்துங் கைக்குள்ளாகும், பவுனமென்ற குண்டலியின் நன்மை
யாலே-பாரபரத்தின் கிருபையினாம் பரிவாய்க்காணும், அவமான புத்
திதனை நினைத்தாயானால்-அரமுடியும் அம்பரத்தை அகன்றுபோமே.

## இரவி மண்டலம்.

அகலாத சூரியன்றன் மண்டலத்தைக்கேளு-அகாரமுடன் உகார
மதை யணைத்துக்கொண்டு, பகலான வுதயமதில் மகாரந்தன்னைப்-பரு
வமுடன் கும்பகத்தைப் பணிந்தாயானால், ஜெகமுழுது மாடிவருஞ்சூரி
யன்றான் - சிவசிவாபிரகாசங் கோடிக்கொப்பாம், இகலான மனதாகத்
தாற் சித்தியாகும்-இருளகன்று வெளியாகும் மனதைப்பாரே. 43

மனதாகச் சந்திரன்றான் சூரியனிற்சென்று - வருவதுவும் போவ
துவுமப்போகாணும், இனமான சந்திரன்றான் சூரியனேயாகும்-இன்ப
முள்ள சூரியனே சந்திரனேயாகும், கனமாகநிலைத்தது சூரியனைப்
பா-கண்டதொரு சந்திரனே யெங்கேயென்றால், தனதாகச் சத்திபிட
மிருந்தாரையா-தானவனாய் நின்றதுதான் ரவியுமாச்சே. 44

## பஞ்சபூசாதிவகை யுரைத்தல்.

ஆச்சப்பாபிருதிவிதா னப்பைக்கொல்லும்-அப்பதுதான் மீறியல்
லோ நெருப்பைக் கொல்லும், பேச்சப்பா நெருப்பதுதான் வாய்வைக்
கொல்லும்-போரான வாயுவுதா னெங்கேயென்றால், போச்சப்பா ஆகா
சந் தன்னில்நின்று - புகழான விந்துவென வளர்ந்ததையா, மீச்சப்பா
விந்துவது நாதமாச்சு-நிலைத்ததடா நாதமென்றபொருள்தான் ஆச்சே.

பாங்கான நாதமதில் விந்துசேர்ந்து-பரப்பிரம ரூபமெனப் பாரீ
ன்மேதே' நீங்காத மாயையொடு வளர்ந்ததப்பா - நிலைத்ததொரு பகுத்த
றிவி னினைவினாலே, தீங்கான மாயையெல்லா மறுத்துத்தள்ளி - தீச்ச
திட்சை யேறுதற்குக் குருவைத்தேடி, ஓங்காரக் கம்பமதில் மனத்தை
வைத்து-ஒருமித்தேதன் குருபதத்தி லொருமித்தேனே. 46

## முப்பூ விவரம்.

ஒருமித்த முப்பூவின் விபரங்கேளு-உண்மையுடன்பூமியுட னாதம்
வாங்கித், தருமித்த சிறுநீரும் பாண்டத்திட்டுத்-தயவான வுவர்ப்பூவை
யதிலேபோட்டு, கருவுற்ற பாண்டமதைப் பதனமாகக்-கருவாக ஞாயி

றுமுன் வைத்திடப்பா, மருவுற்ற வுவர்ப்பூவைக் கரைத்துநீயும்- வாரடா மறுபாண்டந் தன்னிற்றுனே. 47

தானேதான் பத்துமுறை யிந்தவிதம் சமர்த்தாக முடிந்தவுடன் சொல்லக்கேளு, வீணேதான் இரியாதே யிந்தவுப்பில் விபாமுடனிடைக்கிடைதான் வீரம்பூரம், தேனேதான் முப்பூவு மொன்றாய்க்கூட்டிச் செம்மையுடன் நறுநீரால் கல்வத்தாட்டி, கோணருளா துருட்டியதை வட்டுப்பண்ணி கொடுமையுள்ள ரவிமுகத்தில் வைத்திடாயே. 48

வைத்திடுவாய் ரவிமுகத்தில்நீறுமட்டும் மைந்தனே பத்தொருவிற்புடத்தைப்போடு, மெய்த்திட்ட சுன்னமா மென்னசொல்வேன் மெய்யான சுன்னமதைப் பதனம்பண்ணிக், கைத்திட்ட மாகவேசவுக்காரத்தைக் கருவாக எடுத்துவந்து கசைத்திட்டு, மைத்திட்ட மானசிறுநீரைவிட்டு மைந்தனே ரவிமுகத்தில் வைத்துப்போற்றே.

போற்றியே ரவிமுகத்தில்வைத்தபின்பு பூரணத்தை யுடன்சேர்த்துப்பூரம்போட்டு, கூட்டியேகரைத்துநல்லஅடுப்பிலேற்றிக் குழம்பவே வைத்தெரிப்பாய்வற்றுமட்டுஞ், சாத்தியமாய்த்திரியாமலெடுத்தப்பாரு தன்மையுள்ளசவுக்காரஞ்சுன்னமாகும், நாற்றிசையுமெய்க்குமிந்தச்சவுக்காரத்தை நன்மையுடன்பதனமாய்வைத்திடாயே.

வைத்தபின்பு சிறுநீரைப் பாண்டத்திட்டு மைந்தனேரவிபீசங் கூடச்சேர்த்து, வைத்தபின்பு அடுப்பேற்றித் தீயைமூட்டிநன்மையுடன் நீர்வற்றி உப்பாய்நிற்கும், கைத்ததொருநீருப்பைபதனம்பண்ணு கசடருட னீதுவைக் கருதவேண்டாம், புத்தியுடன்பெரியோரைத் தொண்டுபண்ணிப் பூரணத்தைப் பற்றிமன துறிவில்நில்லே.

நில்லப்பாசுழிமுனையில் வங்கொண்டேறு நிலையானமூலமதிற்சின்கொண்டேறு, செல்லப்பா கண்டமதில் அங்கன்றேதான் திறமான சராசுமடங்கும்விட்டிடல், அல்லப்பாசொல்லுகிறேனீராறுந்தான் அமர்ந்திருக்குங் குருபதத்தி லருளைப்போற்றி, வில்லப்பாநாணேற்றிச் சரந்தொடுத்தாற்போல் விசையான சுழிமுனையில் மேவிப்பாரே.

பாரப்பா இரவிமதி சுடர்மூன்றுப்பில் பண்பாக வகைக்குஒருபலந்தைவாங்கிச், சேரப்பாகலவத்திலிட்டுமைந்தாசீக்கிரமாய்மூன்றுமொன்றாய்ப் பொடித்துக்கொண்டு, வாரப்பா செயநீரை விட்டுமைந்தா வார்த்தநீர் வற்றுமட்டுங்கல்வத்தாட்டு, காரப்பா யீராறுசாமமட்டுங் கனிலெழும்ப நன்றாகஆட்டித்திரே. 53

ஆட்டியதோர் முப்பூவை வட்டுப்பண்ணி ஆதித்தன்முன்பாக உலரப்போட்டு, வாட்டுறவு இல்லாம லெடுக்கவேண்டாம் வரிசையுள வட்டதுவுங் கனிரிட்டாக்கால், நாட்டிகமாய் வட்டதனைப் பதனம்பண்ணசமரசமாய்க்காற்றிலாவிடத்திற்றுனும், மூட்டடாநெருப்புடத்தான்போட்டுமுக்யமுள உப்பதுவுஞ்சுன்னமாச்சே

## பூநீற்றுக்கட்டு.

ஆச்சப்பாயின்னமொருவிபரங்கேளு அருளானபூநீறு அன்பா
ய்வாங்கி, பேச்சப்பாவொன்றுமில்லை சுத்தசலந்தன்னிற் பேணியே
கரைத்திறுத்து ரவிமுகத்தில்வைத்து, காய்ச்சப்பா இப்படியேபத்
துமுறைமட்டும் கருவானபூநீறு கட்டிப்போகும், போச்சப்பா ஆர
லது போச்சுப்போச்சு புதுமையுள்ள பூநீறைப் பதனம்பண்ணே.

பதமான காரமுடன் சாரம்ரெண்டும் பக்குவமா யொன்றாக்கி
ரவியிற்போட்டு, சுதமாகக் காய்ந்தபின்பு சாரஞ்சேரு சாதகமாய்
ரவிமுகத்தில் பின்னும்வைத்து, திதமாகவிப்படியேபத்துமுறையப்
பா நிச்சயமாய்ச் செய்துவிடு தினைவாய்த்தாலும், கீதமாகக் கட்டு
வதுஉப்பாய்ப்போகும்விருதுபெற்றவுப்பதுதான்சொல்லக்கேளே.

கேளப்பா கட்டியதோர் பூநீறொன்று இருமையுள்ள கவிச்சு
ன்னமிடையேசேர்த்து, கேளப்பாவீரமொடு பூரங்கூட்டிக் கொடியா
கக் கலவத்திலிட்டுக்கொண்டு, நீளப்பாசெயநீரால் கிட்டிஆட்டி நிச்
சயமாய் நாலுசாமமாட்டி, நீளப்பாகொட்டியதுபோலேவேகத்
இவிவா என்னசொல்வேன் வட்டிப்பண்ணே. 57

பண்ணப்பா வட்டதுவும் நன்றாய்ப்பண்ணி பரிதிமுக முன்பா
க்கப்பதியவைத்து, நண்ணப்பா சூரியனைப் பணிந்துபோற்றி நன்று
கக்காய்ந்தபின்பு வோட்டிலேவைத்து, மண்ணப்பா மேலோடு பொ
தியமூடி மக்களே மண்சீலை ஏழுஞ்செய்து, உண்ணப்பாபத்தெருவி
ற்புடத்தைப்போடு ஓகோகோ கண்ணாஞ் சுண்ணமாச்சே. 58

## சவுக்காரக்கட்டு.

ஆச்சப்பா இன்னமொரு விபரங்கேளு அருளான சவுக்காரக்
கட்டிவாங்கி, மூச்சப்பா ஓடாமல்கலசத்திட்டுமுக்கியமுள்ள காரமு
டன் சாரஞ்சேர்த்து, காய்ச்சப்பா அடுப்பேற்றி நன்றாய்க்காய்ச்சு
கருணையுள்ள சவுக்காரத் தெண்ணெய்போகும், பேச்சபபா வொன்
றுமில்லை சவுக்காரந்தான் பெலமாகக் கட்டியது செத்துப்போச்சே.

## கற்பூரக்கட்டு.

போச்சப்பா கற்பூரக் கட்டிவாங்கிப் புதுமையுள்ள செயநீரில்
தோய்த்துத்தோய்த்து, காய்ச்சப்பாரவிமுகத்தில்நன்றாய்க்காய்ச்சு
கருவாக இப்படியே பத்துமுறைகாய்ச்சு, மூச்சப்பா ஒடுங்கியதொடு
ப்போகும் முக்கியமுள்ளவிளக்கொளியில் பிடித்தாயானால், ஆச்சப்
பாதீபமது அதிலொட்டாது அன்பாகக் கட்டியதுமுழுக்கட்டாமே.

## துரிசுக்கட்டு.

கட்டான துரிசியொரு கட்டிவாங்கிக் கருவான பாரையுப்பை
யதின்மேற்பூசி, மட்டாகச்செயநீரால் தோய்த்துத்தோய்த்துமைச்

தனை யக்கினியில் வாட்டிவாட்டி, இட்டமுடனிப்படியே பத்துமுறைவாட்டி இரவியது அரிசனமும் வெளுத்துக்கட்டும், சட்டமுடனித்தனிசைப் பதனம்பண்ணு சண்டாளர்க் கித்துமுறை சாற்றவேண்டாம். 61

## முக்கட்டுச்சுன்னம்.

சாற்றக்கேள் சவுக்காரங்கற்பூரந்தான் தயவானதுரிசதனுமுன்றங்கேளு, பார்த்துக்கேளா மூன்றுமோர் நிடையாய்ச்சேர்த்துப் பக்குவமாய்க் கல்வத்திட்டுவிட்டுமைந்தா, வார்த்தனைக்கஅறுவகையுந் தன்னுலாட்டு மைந்தனே முப்பத்திரெண்டுசாமம், சாற்றுமிலநானைத்து வட்டுப்பண்ணி தளாவே ரவிமுகத்தி லுலர்த்திடாயே.

உலர்த்தியில்லை ஓட்டில்வைத்து ஓடுமூடி உத்தமமே மண்சீலை வெழுஞ்செய்து, அலர்ந்தொருகுருவடிக்குப் புடத்தைப்போடு அப்பனே ஒருமித்துச் சுன்னமாகும், வளர்ந்தொரு தியாறி எடுத்துப்பாரு வடுக்குனக்குங் கணபதிக்கும் பூசைபண்ணி, மலர்ந்தபூச் சுன்னமப்பா கொடியவேகம் மாசற்றசுன்னமதைப் பதனம்பண்ணே.

பண்ணப்பா வெடியுப்புச் சீனக்காரம் பாங்கானகல்லுப்பு மூன்றுமொன்றாய், எண்ணப்பா கல்வத்தி லிட்டுக்கொண்டு கருவான வெடியுப்புநீராலாட்டி, தண்ணப்பா சாறுசாமமாட்டு சமர்த்தாகக் கனமெழும்ப வன்றியாட்டி, விண்ணப்பா ரவிதனிலே காயவைக்க விதமாக உருட்டியதை வட்டுப்பண்ணே. 64

பண்ணியதோர்வட்டதனை யோட்டில்வைத்துப் பக்குவமாய்க் காயவைப்பாய் பருதிதன்னில், புண்ணியனேவட்டமதுங் கனிவிட்டாக்கால் புதுமையுடன் ஓட்டில்வைத்துச் சீலைசெய்து, நண்ணவே அஞ்சுபத்து எருவிற்றூமம் காட்டியேபுடம்போடு வெளுத்துநீறும் அனைமையுள்ள சுன்னமதாய் நீறிப்போகுந் தயவான சுன்னமதைப் பதனம்பண்ணே. 65

## கருவங்கச்சுன்னம்.

பதமான இன்னமொரு சுன்னப்போக்கு பக்குவமாய்ச்சொல்லுகிறேன் புலத்தியாகேள், இதமான கருவங்கம் ரசமுஞ்சேர்த்து இன்பமுள்ள வித்துவுடனுதங்கூட்டி, சதமான வீரமுடன் பூரஞ்சேர்த்துச் சாதகமாய்க் கல்வத்திலிட்டுக்கொண்டு, விதமாகஅறுவகை நீர் தன்னுலாட்டு விசையுடனே யீராறு சாமமாட்டே. 66

ஆட்டியதோர் வட்டதனை வட்டுப்பண்ணி அப்பனேரவிமுகத்தில் நன்றாய்வைத்து, காட்டியேகாய்ந்தொருவட்டுத்தானும் நன்மையுடன் காய்ந்துகனி விட்டால்மைந்தா, தாட்டிகமாயோட்டில் வைத்துச் சீலைசெய்து தன்மையுடன் நூறெருவிற்புடத்தைப்போடு

பாட்டதிசஞ் சொல்லவில்லை அப்பாகேளு பண்பாகநீறியது சுன்னமாச்சே. 67

## கற்பூரச்சுன்னம்.

ஆச்சப்பா இன்னமொரு விபரங்கேளு அன்பான கற்பூரக் கட்டிவாங்கி, பாச்சப்பா ரவிமதியுங் கூடச்சேர்த்துப் பரிசுடைய வீரமுடன் பூரங்கூட்டி, காய்ச்சப்பா கல்வத்திலிட்டுக்கொண்டு கனமெலும்ப மீராறு சாமமாட்டி, மாச்சலது செய்யாமல் வட்டேப்பண்ணி யமைத்தினை ரவிமுகத்தி லுலர்த்திடாயே. 68

உலர்ந்தபில்லை தனையெடுத்து ஓட்டில்வைத்து உத்தமனே மேலொடு பரியமூடி, தளர்ந்ததுவும் போகாமல்மண்ணுஞ்செய்து தரணிதனில் ஒருமுழத்திற் குழிதான்வெட்டி, உலர்ந்தவொரு எருவடுக்கிப் புடத்தைப்போட்டு உத்தமனேபுடமாறி எடுத்துப்பாரு, மலர்ந்தவொரு பூப்போலே சுன்னமாகும் மாசற்ற சுன்னமதை வைத்துப்போற்றே. 69

## கெந்தகச்சுன்னம்.

போற்றவே யின்னமொரு புதுமைகேளு பொல்லாத கெந்தகந்தான் பலமும்வாங்கி, காட்டியதோர் விந்துவுட னதங்கூட்டிச்சருவான வீரமுடன் பூரஞ்சேர்த்து, வாட்டமிலாக் கல்வத்திலிட்டுமைந்தா வகையாக அறுவகைநீர் தன்னாலாட்டித், தாட்டிகமாய்வளித்துவைத்துப்பில்லைதட்டித் தன்மையுடன் ரவிமுகத்திலுலர்த்திடாயே,

உலர்ந்தபத மென்னவென்றால் கனிவிட்டாக்கால் உத்தமனே ஓட்டில்வைத்துச் சீலைசெய்து, அலர்ந்தமலர்க் குருபதத்தைத்தொண்டுபண்ணி அளவுடனேபுடம்போடச் சுன்னமாகும், மலர்ந்தசுன்னந்தனையெடுத்துப் பதனம்பண்ணி வாசமுள்ள சுன்னமடா மைந்தாகேளு, சலந்துமிகவாடாதே பதனம்பண்ணு சதாசித்தஞ்சதாசிவத்தைப் பணிந்துபோற்றே. 71

போற்றுவது யாதையென்றால் பூரணத்தைமைந்தா புதுமையுள்ள பூரணமே தெய்வந்தெய்வம், நாட்டுவதுசுழிமுனையில்வாசியைத்தான் நன்மையுடன் பூரகமே செய்யவேணும, தேட்டமுடன்சுழிமுனையில் சேர்ந்தால்மைந்தா சிவசிவா சிவயோகி சீவன்முத்தன், தாட்டிகமா யடிமூல மூலாதாரந் தன்மையுடன் சார்ந்தவனே தவசியாமே. 72

## பூமிநாதம்.

ஆமப்பா யின்னமொருவிபரங்கேளு அன்பான பூமியுடநாதம் வாங்கி, நாமப்பா சொல்லுகிறோம் விந்துநீரால் நன்றாகக் கரைத்திறுத்து ரவியில்போடு, காமப்பா நன்றாகக் காய்ந்ததானல் கருவா

சப் பத்துமுறை யிப்படியேகாய்ச்ச, வாமப்பா தன்னாலே கட்டிப் போகும் மகத்தான பூவப்பா சிவமதாச்சே. 73

## செயநீர்.

ஆச்சப்பா சத்தியென்ற பூரணந்தான் அருளான பீங்கானில் வாங்கிமைந்தா, பாய்ச்சப்பா சிவந்தனிலே எட்டிலொன்று பக்குவ மா யிந்தவுடன் பருவம்பாரு, பேச்சப்பா வொன்றுமிலைச் சலமாய்ப் போகும் பெலமான செயநீரால்வீரம்பூரம், தேச்சப்பா செயனீரில் பொடியைத்தூவி சிவசிவா ரவிமுகத்தில் வைத்திடாயே. 74

வைத்ததொரு செயனீரில் காரமேறி மகத்தான கொடிதாக னேறதாகுங் கைத்ததொரு செயனீரைப்பதனம்பண்ணிக் கருவான காசியென்ற குப்பிதன்னில், புத்தியுடன் குருபதத்தைப் பூசைபண் ணிப் புதுமையுள்ள வடுகனுக்கு வடமாலைசாத்தி, பத்தியுடன் பூசை பண்ணிசெயநீர் தன்னில் பக்குவாய்ச் செந்தொழிலைப்பகரக்கேளே.

கேளப்பா இச்சலத்தில் துரிசலிங்கம் கெவுரிசிலை தாரவெள்ளை பூரம்வீரம், நாளப்பா துவைத்தூவி முகத்தில்மைந்தா நாளாறுதின த்திலது கட்டிப்போகும், மாளப்பா இச்சலத்தி லெச்சரக்குமாறு மைந்தனே இந்நீரி லின்னங்கேளு, கோளப்பா ஒன்றுமில்லை செய நீர்தன்னைக் குணமாகப் பீங்கானில் வார்த்துகொள்ளே. 76

கொள்ளப்பா நாகமொடு வங்கமீயம் குருவானாசமுடனேகா ந்தந்துத்தம், மெள்ளப்பா வோட்டில்வைத்துச்சுருக்குத்தாக்க வே கமது தானடங்கிக் கட்டிப்போகும், வில்லப்பா தனக்குநாணேற்றி னாற்போல் வெகுவேதைச் சனவேதை விதமாகும், அல்லப்பா சொல்லுகிறேன் மனதடங்கிநில்லு அன்பாகக் குருபதத்தி லருள் தானேக்கே 77

நோக்குவது பூரணத்தால் நோக்கவேணும் நன்மையுடன்மன தடங்கி நிலைக்கவேணும், வாக்குமன தொன்றாகிநிற்கவேணும் வஞ் சமனைக் கசடகற்றி மனதுபூண்டு, ஆக்கைதனிலே தனையறிந்துகுருவை க்காரு ஆனந்தமதியமுதம் மன்பாய்க்கொள்ளு, நாக்குநுனி பதிவு மிக நன்றாய்ப்பாரு நாதாந்த பேரொளியைக் காருகாரே. 78

## யோகமுறை கூறுதல்.

காரப்பா மயேந்திரமாங் கிரியிற்சென்று கருணையுள்ளபூரணத் தில் கருத்தைவைத்து, பாரப்பா சக்கரத்தில் நின்றுகொண்டு பால கனை நந்திகண்டால் வாதங்காணும், வீரப்பா சொல்லுகிற வார்த் தையினாலென்ன விருதாவிற் சுடுகாட்டுப்பிணமாய்ப்போவார், சே ரப்பாமூலஒளிகாணுமட்டுஞ் சேர்த்துநீசுழிமுனையில் சிறக்கநில்லே.

நின்றதினால் மனதொடுங்குங்காற்றுடாது நேரறிந்துகுருபதத்தை நினைவாய்க்காரு, பண்டுவினை தானகலும் பயமேயில்லை பார்க்கையிலே ஆதாரந் தோணுந்தோணுஞ், சென்றுநீயவ்விடத்திற்சென்றுகொண்டு சிவசிவா சித்தியெல்லாந் திறமாயாடு, நன்றான மனதைவிட்டுக் காத்தாயானால் நலமில்லாச் சுழுத்தியுள்ளே யழுத்துந் தானே. 80

தானென்ற வாசியினால் குருவைக்காரு தன்மைவிட்டு இருந்த திறலொன்றுமில்லை, ஊனனை ஊனறிந்து வுண்ணவேணும் உண்மையுள்ள சத்திசிவங் காணவேணும், தேனான அமுதமது கொள்ளவேணும் தெளிந்தங்கே யோகமுட னிருக்கவேணும், கோனான குருஞானந் தெளிந்துமைந்தா கூர்மையுடன் சுழிமுனையைக் கூர்ந்துபாரே.

பாரான மண்ணாசை தள்ளினாலும் பண்பான தினியுட னாசையாலும், பேரான பெண்ணாசைதள்ளினாலும் பிலத்தகொரு திரோதாயின் கூற்றினாலும், கூறான மண்ணாசைக் கொடுமையாலும் கூற்றான காமத்தின் கொடுமையாலும், தேறும விந்தாசைக் கொண்ட பேர்கள் சிவசிவா சீவகலைத் திறங்காணாரே. 82

சீவகலைதனையறிந்தால்பாடிவிக்குஞ் சிவசிவாவரிசையுட னுண்ணப்பண்ணும், சீவகலை தானறிந்துஎட்டுநாளுஞ் சிவசிவாபுறப்பட்டு நாளும்பாழாய், சீவகலைமதிபோலே சீரணித்துச் செகத்திலேமானிடர்கள் மாண்டாரய்யா, சீவகலை யானதுவே மூலமூலஞ் செம்மையுள்ள கதிரான வன்னிதானே. 83

தானென்றபாதத்தினிடஅடிதானென்பார் தன்மையுடன் அகாரமுதல் சோடசமாய் நிற்கும், வானென்ற நாதமது கண்டத்திற்காணும் மகத்தான வாயுவுக்கு வுகந்தவீடு, ஊனென்ற பஞ்சகர்த்தானிருக்கும்வீடு உற்பனமாஞ் சத்திசிவ மொடுங்கும்வீடு, தேனென்ற மதியமுதஞ் சொலிக்கும்வீடு சிவசிவா சிவகலை யிருந்தவீடே. 84

## கொள்ளும் பொருள்.

வீடறிந்து மந்திரத்தைதனியுத்தவேணும் வீட்டிலுள்ளபேர்களையும் விரும்பவேணும், நாடறிந்து நல்லபதங்காணவேணும் நன்மையுள்ள சத்திசிவபூசைவேணும், கூடறிந்துகுருபாதங்காணவேணுங் குருடனைப்போலிருந்தாக்கால்குணமோமைந்தா, தேடறிந்தால்சற்குருவைத்தேடவேணுஞ் செகசாலமாயையெல்லாந் தள்ளுதள்ளே.

## தள்ளும் பொருள்.

தள்ளுவதுயாரையென்றால்குணமில்லாரைச்சற்குருவையறியாத சமயத்தோரை, கள்ளுஅபின் சாராயங்கொண்டபேரைக் கஞ்சாவு மீனிறைச்சி கலந்தபேரை, உள்ளுணர்ந்துபாராத வுலுத்தமாண்பர் உத்தமரைத் தூஷணித்த வுருட்டுமாண்பர், நல்லுணர்வு இல்லாத அசடர்மெத்த நாட்டிலே யவர்களைநீ யறிந்துதள்ளே. 86

## ஆகாச ஜெயநீருப்பு.

அறிந்துகொண்டு இந்தாலே ரவிமைபந்தட்டி அந்தரவி பூரணத் திலுறைவாய்ப்போகும், மறிந்தரவி பூரணத்திற் பட்டபோதே மூக் கியமுள்ள ஜலமாகி ஜெயநீராகி, செறிந்ததொருசெயநீரைப் பிங்கா ன்றனிற் சேரகவிட்டுரவி முகத்தில்வைத்தால், பொறிந்த வொரு பொறிபோலே யுப்பாயிற்கும் புதுமையுள்ள உப்பதனைப் பதனம் பண்ணே. 87

பதமான வுப்பெடுத்துக் கொண்டால்மைந்தா பக்குவமாயறு சுவையுங் கழன்றுபோகும், சதமானபூரணத்தையப்பால்பாரு தரு வானகற்பகம்போல் கப்பமாகும், அதமான வியாதியெல்லாமதமா யிப்போகும் ஆனந்தமயமான அருபமாகும், மதியான மாயையெல் லா மற்றுப்போகும் மந்திரபஞ் சாட்சரத்தை மருவிப்பாரே. 88

## பஞ்சாட்சர மகிமை.

மருவிநின்ற ஜனங்களுக்கு மஞ்சபூதம் வாகான தேவதைக்கு மஞ்சபூதம், தருவான யோனியெல்லா மஞ்சபூதந் தாக்கான அண் டமெல்லாமைந்துபூதம், குருவானசதாசிவத்துக்கைந்துபூதங் கூறு னஅஞ்செழுத்தா லெல்லாமாச்சு, அருவமுடன்வேடமிட்டு நீறுசா ற்றித் துன்பவினை தீராமல் துடிகொண்டாரே. 89

## முப்பூவின் பெயர்.

துடிகொண்ட முப்பூவின் விபரங்கேளு சோதியுப்பு ஆதிதனைச் சொல்லக்கேளு, முடிகொண்ட வழலையென்றுங் கல்லுப்பென்றும் முனையானசுழினையென்றும் வண்ணானென்றும், படியானபடிகமெ ன்றுங்குடோரிப்பங்கயத்தின்பூவென்றும்பாருப்பென்றும், வடி வான ஆகாசபுரவியென்றும் மகத்தான மவுனமென்றும் வயங்கும் பேரே. 90

பேர்கொண்ட வடியான விந்துவென்றும் பிலத்தநீருப்பென் றும் வாரிதிதானென்றும், கார்கொண்ட மேகமென்றுங் கன்னை யென்றுங்கருவான வூசிநீருப்பதென்றும், சீர்கொண்டவெண்சாரை சாரமென்றுஞ் சிவமென்றுங்கருவேம்பின்சாரமென்றும், ஊர்கொ ண்ட சயிலமென்றுஞ் செயநீரென்றும் உத்தமனே திராவகத்தி லு ண்மைதானே. 91

உண்மையுள்ள அடியென்றுஞ்சத்தியென்றும் உவரானவுவரொ ன்றுஞ்சருகதென்றும், தன்மையுள்ளபூமியுடநாதமென்றுஞ்சங்கை யுள்ளபிருதிவியின் காரமென்றும், புன்மையுள்ளபூரமென்றும்புழுக தென்றும் பொல்லாதவிஷமியென்றும்போதமென்றும், பண்புள்ள சிவமென்றுங்களியுப்பென்றும் பாக்கானபூரணத்திலுப்பின்பேரே.

காணாத பூரணத்தின் கருவினாலே கருணையுள்ள கைலாசமேருத ன்னைக், கோணாதே நின்றநிலை குறித்துக்கொண்டு குணமாக ரேசகபூ ரகமும்பண்ணி, வானான கும்பகத்தில் மனதுபூண்டால் மகத்தானசிவ யோகமாகுமாகும், தேனான மதியமுதச் செயல்தன்னாலே சிவசிவா சிவயோகத் திறந்தான்பாரே. 99

## பஞ்சபூதமெழுகு.

பாரான பிருதிவியு மப்புங்கூட்டிப் பங்கயத்தின் மேலேறிப்பதிவு மாகித், தேரகத் தேய்வுடனே வாய்வுரெண்டுஞ் சேர்ந்தாக்கா லைந்து ருவு மொன்றாய்ப்போச்சு, கூறாத ஐந்துருவு மொன்றாய் நின்றால் குரு வானபோதமடா யார்தான் காண்பார், மாறாத மனமுடையசித்தர்க்கெ ல்லாம் வகையாக ஐந்துருவும் வணங்கும்பாரே. 100

வணக்கமுள்ளஐந்துருவு மைந்தேயுப்பு வரிசையுடனிதையரிந்து கல்வத்திட்டு, இணக்கமுட னரைக்கையிலே மெழுகாய்ப்போரும் என் னசொல்வே னிம்மெழுகி னியல்புதன்னை, மணக்கமுடன் மெழுகெடு த்துப் பதனம்பண்ணி மார்க்கமுட னிம்மெழுகை வைத்துப்போற்றித், தனக்குமிது கிடைத்தபொரு ளென்றுநீயுஞ் சதாகாலம் அம்மெழுகை ப் பூசைபண்ணே. 101

பூசையது செய்ததினாற் பலிக்குஞ்சித்தி பூரணத்தை மறந்ததினா லொன்றுமில்லை, நேசமுடன் பூரணமே தெய்வமென்று நிலைத்துமனது றுதியிலே நிறுத்தவேணும், ஆசையென்ன பூரணத்தி னாசையாசை, அதைவிட்டால் வேறுமொரு ஆசையுண்டு, பாசமதைத்தானகற்றியறி விற்சேர்ந்து பாவெளியில் நினைந்ததினாற் பாலனாமே. 102

பாலனாய்ப் பதினாறு பிராயமாவாய் பராபரைத்தாப் பூரணத்தாற் பலிக்குஞ்சித்தி, காலனென்ற காலனவ னோடிப்போவான் காலனென்று சொன்னதுதான் பாசம்பாசம், ஆலமுண்ட சிவனாரும் விஷத்தையுண் டார் அவ்விஷந்தான் பராபரத்தி னருளேயாகும். சீலமுட னாலமென்ற விஷந்தான்போதஞ் சிவசிவா பூரணத்தின் செயலைப்பாரே. 103

## கெந்தகமெழுகு.

பாரப்பா முப்பூவு மொன்றாய்ச் சேர்ந்துப் பரையீன்றநாதகெந்தி ரசமும்வீரம், சேரப்பா கல்வத்தி லாட்டினாக்காற் சிவசிவா மெழுகது போற் சேர்ந்துநிற்கும், ஆரப்பா அறிவார்கள் கெந்திப்போக்கு அறிந் தவர்கள் சதாசிவத்தை யறிவாரப்பா, நேரப்பா நின்றநிலை தவறாமற் றான் நேசமுட னிம்மெழுகைப் பதனம்பண்ணே, 104

பண்ணப்பா பூசையினாற் பலிக்குஞ்சித்தி பாசமதைத் தானறுத்து நேசம்வைத்து, உண்ணப்ப பராபரமே செயல்தானென்று உற்றுமெ ள்ள ஆறுதலமூரேசென்று, விண்ணப்பா தீண்டாதே சுடரைப்போற்று

வேதாந்த பூரணைத்தில் விரும்பிநில்லு, கண்ணப்பா சுழிமுனையில் கரு
த்தாபூனு கருவான பன்னிரெண்டு மடங்குந்தானே. 105

## தாளகமெழுகு.

தானென்ற சற்குருவாமுப்பூவோடே தன்மையென்ற தாளகமும்
வீரம்பூரம், தேனென்ற ரசமுடனே கல்வத்திட்டுத் திறமாக ஈராறு
சாமமாட்டு, கோனென்ற மெழுகாகு மப்பாகேளு குருவான மெழுகது
வைட்புகனம்பண்ணு, நானென்றஆணவத்தைப் போக்கிக்கொண்டு நன்
மையுட னிம்மெழுகைப் பூசைபண்ணே. 106

பூசைபப்பா தினந்தோறும் பூசைபண்ணு புலத்தியனே உனக்காக
இந்தநூலே, நேசமுட னாயிரத்து யிருநூறாக நிலைத்தனடா கருவெல்
லா மிதிலேயப்பா, பாசமதைத்தானறுத்துப் பதியிலூணிப் பாய்ச்சடா
மெழுகையுநீ நவலோகத்தில், மாசியது தானறுத்துப் பழுப்பாயேறி
மகந்தான சிவகூடந்தாய் மகிழ்ந்துகாணும். 107

மகிழ்ந்தவொரு சிவகலையைக் கண்டுமேயும் மகிழாதேபுலத்தியனே
மனம்வேருகும், நெகிழ்ந்தமன மிருக்குமடா வெகுநாட் செல்லும் நே
ரான பூரணத்தைநெஞ்சிற்குக்கு, பகுர்ந்தவொரு சிவயோகப் பண்பில்
நில்லு பராபரமே கெதியெனவே பணிந்துபோற்று, தகுந்தமன முறு
தியுடன் வலுத்துப்போகும் தன்மையுள்ள பராபரத்தைதாக்கிப்பாரே.

## லிங்காரசமெழுகு.

பாரப்பா முப்பூவும் லிங்கஞ்சேர்த்துப் பஞ்சுடைய வீரமுடன்
புழுகுபூரம், சேரப்பா கல்வத்தி லொன்றாய்ச்சேர்த்துத் திறமாகஅரை
க்கையிலே மெழுகாய்ப்போகும், வீரப்பாசெய்யாமல் மெழுகுதன்னில்
விஷமில்லா ரசமதிலே நாலிலொன்று, காரப்பாகல்வத்தி லிட்டுநன்றாய்
கருவிட்டு அரைக்கையிலே சேர்ந்துபோமே. 109

சேர்ந்தவொரு லிங்காச மெழுகுதன்னைத் திறமான சிமிழ்தனி
லே யடக்கம்பண்ணு, கூர்ந்துவெள்ளக் குருபதத்தை தொண்டுபண்
ணிக் கூர்மையுள்ள மெழுகதிலே குன்றிவாங்கி, சேர்ந்துகொண்டு இம்
மெழுகைக் கொண்டாயானல் நிலைத்துதடா சடலமென்ற கூடுதானும்,
தேர்ந்து இந்தமெழுகதிலே மண்டலமே சொண்டால் சிவசிவா கவுன
மென்ற சித்துக்தானே. 110

## ஆனைக்கல் சத்துமெழுகு.

சித்தான சித்திலொரு விபாஞ் சொல்வேன் திறமான ஆனைக்கல்
சத்துவாங்கி, முத்தான பூரணத்தை யதிலேசேர்த்து மூர்க்கமுள்ளரச
முடனே பூரஞ்சேர்த்தி, கர்த்தாவைத் தான்தொழுது ரவியில்வைக்கக்

கருணையுட னுடைது வொன்றாய்ச் சேர்ந்து, வற்றாத மெழுகதுபோலி
ருக்கும் பாருவாகாக இம்மெழுகைப் பதனம்பண்ணே. 111

பதனமுட னிப்மெழுகிற் குன்றியுண் ணு பகருமல் மூலமதில்நின்
ருயாளுல், விதனமெல்லா மோடிவிடும் பலக்குங்காயம் மேன்மையுள்ள
கற்போலே விளங்குந்தேகம், மதனன்போல் வடிவாகும் பிலமுண்டா
கும் பலந்தான அஷ்டசித்தாங் கைக்குள்ளாகும், அதமான கருவிகள்
தான் மெத்தவுண்டு அசடரிடஞ் சொல்லாதே யறிவைப்பாரே. 112

அறிவான பூரணமே தெய்வந்தெய்வம் அருமையுள்ளபூரணத்தை
யார்தான்காண்பார், குறியான குறிபறிந்த பெரியோர்காண்பார் குண்
டலியைச் சத்தியென்றுங் கூறுங்கூறும், நெறியான சிவயோக மார்க்க
மெல்லாம் நேர்மையுட னறிவிக்கும் பூரணத்தின்கூறு, பரியானதேசிய
டா அகாரபீடம் பாதெரி தனையறிந்து பணிகுவாயே. 113

அபக்குவர்க ளிவரெனல்.

வாய்திறந்து பேசாதபடையர்மெத்த வானறிந்துசேராத குருடர்
மெத்த, தாயறிந்து இணங்காத கழுதைமாண்பர் தலைவனையு மறியாத
சண்டிமாண்பர், காயறிந்து கனியறிந்து கொள்ளாமாண்பர் தாசினியில்
மெத்தவுண்டு கருத்தில்லார்கள், தீயறிந்து அனல்மூட்டத் தெரியாமா
ண்பர் சிவனேவடந் தனையறியார் திருடர்தானே, 114

தானென்ற தத்துவத்தை யறியாமூடர் தன்மையென்ற மனமோ
டேங்கும்நிலையுங்காணுர், கோனென்றகுருபதத்தின் குறியுங்காணுர் குரு
டரவர் காயாசங் குறடுமிட்டு, நானென்ற ஆணவத்தை மெத்தப்பேசி
நலமில்லா அஞ்செழுத்தை யுபதேசித்து, வீணென்ற வீண்மதங்கள்
மெத்தப்பேசும் வெள்ளாட்டுப் பயல்களுடன் சேராதையா. 115

சேராதகருவறிந்து கள்ளமாண்பர் செத்தபிணம் போற்றிரிவார்
சிவனேயென்று, கூறாத பொருளையெல்லாங் கூடுமென்பார் கூறறிந்து
சேராத குருடர்பட்டை, ஆறாதாசத்துவத்தின் செயலைக்காணுர் அகண்
டபரி பூரணத்தி னறிவைக்கண்டு, தேறாதசித்தர்கள்தான் கோடியுண்டு
சிவசிவா தேறினபேர் கோடிக்கொன்றே. 116

ஒன்றான முப்பூவிற் காரஞ்சேர்க்க ஒருமையுள்ள சாரமே ரசந்தா
னப்பா, பன்றான சேதிபிது காரசாரம் பருவமறிந் திலைமதிற்பகாமா
ட்டார், நன்றான புலத்தியனே யுனக்குச்சொன்னேன் நலமறியாக் கார
மதைச்சாரமென் பார் உண்டான சோதியடா ஆதியந்தம் உரிமையுள்ள
பூரணமென் றுகந்ததில்லே. 117

நில்லென்று முன்சொன்ன சாரமீரில் நிசமான விரமுடன் பூரஞ்
சேரு, கொல்லென்று பொங்கியது அமருக்பாரு கொடுதான நீரப்பா
கூறப்போமோ, சொல்லென்ற அந்நீரைக் குப்பிதன்னில் சுருக்காக

அடைந்துநீ புசனம்பண்ணி, வல்லமைகள் பேசாமல் மன தடங்கி மகத் தான செயநீராந் தொழிலைப்பாரே. 118

## லிங்கக்களங்கு.

பாரப்பா லிங்கமொரு கட்டிவாங்கிப் பருவமுடன் செயநீரைச்சுருக்கித்தாக்கு, வீரப்பா கட்டியது அடங்கிப்போகும் விசையான முப்பூவிற் செயநீர்விட்டு, காரப்பா கல்வத்தி லாட்டினக்கால் கருணையுள்ள மெழுகாகும் லிங்கத்தப்பி, சீரப்பா மண்சீலை யேழுஞ்செய்து சிவசிவா காடைதனில் மணிபோலாமே. 119

ஆமப்பா லிங்கமணிதனையெடுத்து ஆதியென்ற தங்கமதில் நாலுக்கொன்று, நாமப்பாசொல்லுகிறேன் கொடுத்தாயானால் நன்மையுள்ள லிங்கதங்க மொன்றாய்ச்சேர்ந்து, தாமப்பா லிங்கமென்ற களங்கதாகுந் தயவான களங்கமதை யுடைத்துக்கொண்டு, வாமப்பா தனையறிந்து கொண்டுமைந்தா மகத்தான மதிதனிலே பத்துக்கொண்டே. 120

ஒன்றான களங்கமதை வெள்ளிக்கீந்தால் உத்தமனே வயதுபதி னாறதாகும், நன்றான வெள்ளிசெம்பி லீந்தாயானால் நன்மையுடனென் பதரை தப்பாதையா, கன்றான குடவனிலே யீந்தாயானால் கருவான எழுமையுங் காணுங்காணும், அண்டர்பிரான் தொண்டரென அருளைப் பெற்று அரகரா சிவயோக அருளைப்பாரே. 121

## நாகக்கட்டு.

பாரப்பா முன்சொன்ன சாரநீரிற் பக்குவமாய் நாகமதை யுருக்கிச்சாய்த்தால், காரப்பா ஐந்துமுறைசாய்த்தாயானாற் கன்மமுள்ளகுடில மெலாங் கழன்றுபோகும், சீரப்பா அடங்கியது மணிபோலாகுஞ் சிவசிவா நாகமணி யென்னசொல்வேன், ஆரப்பா அறிவார்கள் நாகப்போக்கு ஆதியந்தப் பொருளதினு லடங்கிப்போச்சே. 122

அடங்கினதோர் நாகமதை யெடுத்துக்கொண்டு அப்பனே தங்க மதிலிடைக்கிடைதான்சேர்த்து, நடங்கவில்லா மணியெடுத்து வுடைத்துமைந்தா தயவாகவெள்ளிசெம்பிலீந்தாயானால், முடங்கலில்லா ஆறேழுவயதேயாகும் மூடருக்கும் இக்கருவைச் சொல்லாதையா, திடங்கணிந்த அமுர்தமுண்டு குருவைக்காரு தேசதீட்சை பதிதனிலே சேர்ந்து நில்லே. 123

நில்லென்று சொல்வதுதா னெங்கேயென்றால் நிருமலமாங் குருபதத்தே நேர்ந்துநில்லு, தள்ளென்று சொல்லதுதா னாரையென்றால் தன்மையில்லா வண்டரைநீ தள்ளுதள்ளு, கொல்லென்று சொல்வதுதா னாரையென்றாற் குருவைநினைந் துருகாதகுறும்பர்தன்மேல், செல்லென்று மன்மதனைக் கொல்லவென்றாற் சிவசிவா குருவருளைத் தினமும் போற்றே. 124

## துருசிசுன்னம்.

போற்றுவது பூரணத்தைப் போற்றிக்கொண்டு புதுமையுள்ள துரி
சினுட சுன்னஞ் சொல்வேன், மாற்றுவது வழலையுட னிணங்கன் கூட்
டி மாறுமே விடைக்கிடைதான் துரிசிகூட்டி, தாட்டிகமாய் கல்வத்திலிட்
டுக்கொண்டுசரசமாய்முன்னீரைவிட்டுஆட்டி, வாட்டிடுவாய்பில்லைதனை 125
ரவிமுகத்தில் மைந்தனே நன்றாக வுலரப்போடே.

உலர்ந்தபில்லை தனக்குமேல் சீலைசெய்து உண்மையுடன் காயவை
த்துக் குருவைப்போற்றி, அலர்ந்த எரு தனையெடுத்துப் புடத்தைப்
போடு அரகரா புடமாறி யெடுத்துப்பாரு, மலர்ந்ததொரு பூப்போலே
நீறிநிற்கும் மகத்தான சுன்னமடா என்னசொல்வேன், தளர்ந்ததொரு
ரசந்தன்னைப் பழியாய்க்கொல்லும் தன்மையுள்ள சுன்னமதைப் பத 126
னம்பண்ணே.

## ரசமணி.

பண்ணியதோர் சுன்னத்தின் மார்க்கங்கேளு பாலகனே ரசமத
னைச் சுத்திபண்ணி, கிண்ணியென்ற தாம்பூரக் கிண்ணிதன்னிற் கிரு
பையுள்ள ரசமதனை அதனில்வார்த்து, நன்னயமாய் ரவிதனிலே ரசத்
தைவைத்து நன்றான சுன்னமதை மேலேதூவி, கன்னிமயேஸ் வரிதனை 127
க்குப் பூசைபண்ணிக் கையாலே மத்திக்கத் திரளுந்தானே.

திரமான ரசமதனை யெடுத்துமைந்தா சிவசிவா வுண்டைபோல்
திரட்டிக்கொண்டு, உறமான முப்பூவின் முன்னீர்விட்டு உத்தமனே
குப்பிமணி தனக்குப்பூசி நிறமான ரவிமுகத்தி லுலர்த்திமைந்தா நிச்ச
யமாய் விளக்கொளியில் வாட்டினுக்கால், பரமான பரமகுரு அருளி 128
னாலே பக்குவமா யிறுகியது மணிபோலாமே.

ஆமப்பா யிம்மணிக்குச் சாரணைகள்தீர்ந்து அருள்பெருகுஞ் சிமி
ழ்தனிலே யடக்கம்பண்ணி, நாமப்பா சொல்லுகிறோம் நாவிலிட்டு நன்
மையுள்ள அமுதமது கொண்டாயானால், தாமப்பா வுனதுருவம் நிர்ம
லமாய்க்காணுஞ் சச்சிதானந்தவெளி தானேதோன்றும், காமப்பாகொ
ண்டதொரு திறத்தால்மைந்தா கயிலாச மேருதன்னைக் காணலாமே.

## வழலைநாதமுப்பூச்சுன்னம்.

காணப்பா இன்னமொரு முப்பூச்சொல்வேன் கருவானவழலையுட
நாதங்கூட்டி, பேணப்பா இந்நிடைக்குப்பூரஞ்சேர்த்துப் பெருமையுள்ள
கல்வத்தி லிட்டுமைந்தா, தேனப்பா முன்சொன்ன செயநீர் விட்டுத்
திறமாக அரைக்கையிலே காரமேறி கோணப்பா தன்னருளால் சுன்ன 130
மாகிக் கொடுமையுள்ள சுன்னமதாய் நிற்குந்தானே.

## அரிதாரக்கட்டு.

தானென்ற சுன்னமதை யெடுத்துக்கொண்டு தாரமென்ற அரிதா
ரக் கட்டிக்கப்பா, வானென்ற செயநீரா லரைத்து மைந்தா மகத்தான

தாரத்துக் கங்கிபூட்டி, பானென்ற ரவிமுகத்தி லுலர்த்திமைந்தா பக்குவமாய் மண்சீலை யேழுஞ்செய்து, தேனென்ற பூரணத்தை மனதில் வைத்து சிவசிவா காடையென்ற புடத்தைப்போடே. 131

போட்டபுடந் தணியெடுத்துப் பார்த்தாயானால் புதுமையுள்ளதார மதுகட்டிப்போகும், தாட்டிகமாய்க் கட்டியதோர் தாரந்தன்னைத் தயவானசெம்புவெள்ளிக் கீந்தாயானால், நாட்டமுடனீராறு வயதுபெண்தான் நாயகிபோ லுனதுமுன்னே நாடிநிற்பாள், தேட்டமுடனவள்பதத்தைப் பூசைபண்ணு தெவிட்டாதே பூரணத்தைத் தினமும்நோக்கே.

நோக்குவது பூரணத்தைநோக்கவேணும் நுண்மையுள்ளலட்சணத்தைப் பார்க்கவேணும் தாக்குவது ஒருநிமைக்கு ளிருளையெல்லாந் தட்டழிந்து போகவேதாக்கவேணும், மார்க்கமுட னிம்முறைகள் பார்க்கவேணும் மந்திரபஞ்சாட்சரத்தில்நிற்கவேணும், ஆர்க்குமிந்தமுறைகளைநீ சொன்னாயானால் அப்பனே யுனதுசிரம் வெடித்துப்போமே.

போமப்பா சகலசித்தும் பொய்த்துப்போகும் பொல்லாத சண்டாளர்க் கீந்தாயானால், நாமப்பா சொல்லுகிறோமிந்தச்சாபம் நம்மாலே தீர்ப்பதற்கு முடியாதையா, ஆமப்பா சொல்லிவிட்டோமிந்தநூலை அடக்கமப்பா வெகுபதன மடக்கம்பண்ணு, தாமப்பா அடக்கம்விட்டு வெகுளியானால் தன்னுடலைக் காணமற் றயங்குவாயே. 134

## நாகரசக்கட்டு.

தயங்காம லின்னமொருவிபரங்கேளு தயவான நாகரசஞ்சரியாய்ச்சேர்த்து, மயங்காம லடிமுடியுந் திரிசிபூரம் மகத்தான வீரமுடன் சினங்கூட்டி, தியங்காமற் கல்வத்தி லாட்டிமைந்தா தேவியென்னு மால்தேவிக் கங்கிபூட்டி, நயங்காணு மென்றுநீ மண்சீலைசெய்து நன்றாக ரவிமுகத்திற் காயவையே. 135

வையப்பா ரவிமுகத்தில் நன்றாய்க்காய்ந்தால் மயங்காமல் புடம்போட மைந்தாகேளு, மெய்யப்பா சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு மேன்மையுள்ள ரவிபோலேகட்டிநிற்கும், கையப்பா வுதவுவதுபோலே மக்காள் கனமான ரவிமதிபி லீய்ந்தாயானால், பொய்யப்பா சொல்லவில்லை பத்துமாற்று பொன்போலே யிருக்குமடா புகழ்ந்துகாணே.

காணப்பா உப்புடனே புளியுஞ்சேர்த்து களிப்பான குடவனைத்தான் தகடாய்த்தட்டி, வீணப்பா சொல்லவில்லை தகடுதன்னில் விசையான அரைமருந்தை வினவிக்கொண்டு, பேணப்பாபுடம்போடச்செம்பாய்ப்போகும் பிலத்தமொரு செம்பதனை உருக்கிக்கொண்டு, ஊணப்பா கட்டினதோர் தாரந்தன்னை உகந்துநீ கொடுக்கின்ற வரிசைகேளே.

கேளப்பாவுருகினதோர் குடவன்தன்னிற் கிருபையுடன் வெள்ளியதிலீந்துகொண்டு. கோளப்பா வாராமலிரண்டுஞ்சேர்த்துக் குள்ளென்றுவுருக்கையிலே மைந்தாகேளு, வாளப்பா கட்டினதோர் தாரந்தன்னை

வரிசையுடன் கொடுக்கையிலே வாங்கிக்கொள்ளும், தேளப்பா கொட்டினதோர் விஷந்தான் சென்று சிவசிவா பழுப்பேறித் தங்கமாச்சே.

## சீனமாதிமுப்பூச்சுன்னம்.

ஆச்சப்பா இன்னமொரு முப்பூச்சொல்வேன் அரகரா ஆதி உப்புக்கிடைதான்கேளு, காய்ச்சப்பா காய்ச்சினதோர் கம்பிஉப்புங் கருவான சீனமுடன் மூன்றுங்கேளு, பேச்சப்பா ஒன்றுமில்லை யிடைசரியாய்க்கொண்டு பெருமையுள்ள சாரசீர் விட்டுஆட்டி, மாச்சலென்று நினையாமல் கல்வத்தாட்டி மக்களை யுருட்டியதை வட்டுப்பண்ணே.

பண்ணியதோர் வட்டதனை ரவியில்மைந்தா பாங்காகக் களிந்திடவே காய்ந்துதானால், புண்ணியனே மண்சிலை செய்துகொண்டு புந்தியுடன் புடம்போடு சுன்னமாகும், கன்னிமயேஸ்வரிதனக்கு பூசைசெய்து கருவானசுன்னமதிற் களஞ்சிவாங்கி, தன்மையாய்த் தாரத்துக்கங் கெதட்டித் தயவான சாரசீர் தன்னாற்றுமே. 140

தானென்ற கவசமதை நன்றாய்ச்செய்து தன்மையுடன் மண்சிலையேழுஞ்செய்து, கோனென்ற குருபதத்தைத்தொண்டுபண்ணிக் குணமாக ரெண்டெருவிற் புடத்தைப்போடு, மானென்ற அரிதாரங் கட்டிநல்ல மகத்தான தன்னிறமா யிருக்கிற்கும், தானென்ற ஆணவத்தைப் போக்கிமைந்தா தயவான தாரமதை யெடுத்துக்கொள்ளே. 141

கொள்ளப்பா கட்டினதோர் தாரந்தன்னைக் கூசாமல் ரவிமதியிலீந்தாயானால், விள்ளக்கேளாறேழு மாற்றுக்காணும் விசையான தாய்சேர்க்க எட்டுமாற்று, சொல்லக்கேள் புலத்தியனே தகடாய்த்தட்டிச் சொல்லடங்காப் புடந்தனிலே யிறங்குந்தங்கம், சொல்லப்பா சிவயோக மார்க்கந்தன்னிற் சிவசிவா மனதறிவாற் றினமும்நோக்கே. 142

நோக்குவது பூரணத்தை நோக்கவேணும் நன்மையுள்ள குருபதத்தைப் பணியவேணும், நாக்குரிசை தனையகற்றிக் களியேநின்று நன்றான கங்கைதனை நவமாய்க்கொள்ளு, வாக்குமன தொன்றாகி மனத்தைக்காரு மகத்தான ரேசகபூ ரகமும் பண்ணு, தர்க்குவது கும்பகத்திலறிவைமூட்டுந் தன்மையுடன் யோகமதைத் தாக்கிப்பாரே. 143

பாரப்பா மூலமதைப் பூசித்தாக்கால் பராபரத்தின் செயலவனைக் காணலாகும், சேரப்பா பிறப்பிறப்பு ரெண்டுங்காணும் சீடுலகில் மகத்துவரே தெய்வமென்பார், ஆரப்பாசொன்னாலுமுலகமேயாம் அருளான பூரணத்தை யறியாமூடர், கூறப்பா உலகமெல்லாஞ் செனித்தவாறுங் கூர்மையுள்ள நாதவிந்து ரெண்டுந்தானே. 144

ரெண்டான பொருளறிந்து பூசித்தோர்கள் நிலைத்தார்கள் கோடானகோடியட்டும், வண்டானதது சென்றுமதுவுண்டாப்போல்மகத்தான பூரணத்தை மருவிப்பாரு, அண்டர்கோ னருள்பெருகி உலகமீதில்

அஷ்டமா சித்துகளு மாடிநிற்பான், பண்டான பரப்பிரம மாகியே தான் பாருலகிற் குருவாகித் தலைக்குவானே. 145

## நாகரசமுப்பூச்சுன்னம்.

நலக்கமதா யின்னமொரு முப்பூச்சொல்வேன் சோதியுள்ள புலத்தியனே சொல்லக்கேளு, வலக்கமதாய் நாகமுடன் ரசத்தைச் சேரு மைந்தானே அடிமுடியுங் கூடச்சேரு, பழக்கமதாய் வீரமுடன் புழுகுசேரு பங்கமாங் கல்வத்தி லிட்டுக்கொண்டு, மலர்க்கமலை நீராலேயரைத்தையாறல் மைந்தனே மெழுகாகும் வட்டுப்பண்ணே.

பண்ணியதோர் வட்டதனை காயப்போட்டுப் பக்குவமாய்மண் சீலை செய்துக்கொண்டு, உன்னியதோர் முழமளவுபுடத்தைப்போடு உத்தமனே புடமாறி யெடுத்துப்பாரு, வெண்மையுள்ளசுன்னமதாய் நீறிநிற்கும் வேதாந்த ஆதிமுன் குருவாய்நிற்கும், புண்ணியனே யிந்தநீ ரதிகச்சுன்னம் பூரணத்தின் செயலதிறற் சுன்னமாச்சே.

ஆச்சப்பாயிச்சுன்னந்தாளகத்திலப்பி அடைவாகமண்சீலையே மூஞ்செய்து, காய்ச்சப்பா ரவிமுகத்தில்நன்றாய்க்காய்ந்தால் கருகாமல் பத்தெருவிற் புடத்தைப்போடு, மூச்சப்பா ஓடாம லுருகிநிற்கும் மூவுலகுமெச்சுமடா இந்தத்தாரம், தாட்சியொன்றுமில்லையடா ரவிமதியிற்றூக்கித் தயவான பதினாறு மாற்றுப்பொன்னே. 148

பொன்னுருஞ் செம்புதனிற் பத்துக்கொன்று பூட்டினால் வயதெட்டாய்ப் புகழ்ந்துகாணும், உன்னுனை மதிதனிலே பத்துக்கொன்று ஊட்டினால் பத்தரைதான் தப்பாதையா, கன்னுனை குடவனிலே பத்துக்கொன்று காட்டினால் எழரைக்கு அதிகங்காணும், வண்ணமுள்ள மால்தேவி கூத்துமெத்த வாக்கடங்கா மனமடங்காச் சித்துமாமே. 149

## துரிசிமுப்பூச்சுன்னம்.

சித்தான துரிசிப்பூச் சுன்னஞ்சொல்வேன் சித்துமுள்ள புலத்தியனே சொல்லக்கேளு, பத்தான சவுக்காரஞ் சீனக்கூட்டிப் பசுமையுள்ள துருசதுவு மிடையேசேர்த்து, சத்தான இனக்கனுடன் கூடன்சேர்த்துத் தயவாகவாய்நீரால் கல்வத்தாட்டு, முத்தானமெழுகதுபோல் நிற்குமப்பா மோசமொன்றும் நினையாதே வட்டுப்பண்ணே. 150

பண்ணியதோர் வட்டதனைக் காயப்போட்டுப் பக்குவமாய்க் காய்ந்தபின்பு மண்ணுஞ்செய்து, தன்மையுடன் பத்தெருவிற்புடத்தைப்போடு தணலாறி யெடுத்துப்பார் சுன்னமாகும், புண்ணியவானுனுக்கால் நனைறாய்நீரும் புலத்தியனே யந்நீற்றைப்பதனம்பண்ணு, தண்ணியில்லாத் துணிகளிலேபோட்டுப்பாரு தயவானவாருதியோற்செலமுமாச்சே. 151

செலமான நற்சலத்தை யொன்றில்வாங்கிச் சிவப்பான தாமிரத்திற் சுருக்கித்தாக்கு, அமலான வூறலது அற்றுப்போகும் அதின்பிறகு அன்னமதைக் கவசம் பண்ணு, உலகளந்த அரியினுட தேவிதானும் உண்மையுடன் கவசமா யுகந்துநிற்பாள், கலகமதுசெய்யாமல் ரவிமதியிற்றாக்கு கருணையுடன் பதினாறு மாற்றுப்பொன்னாம்.

பொன்னானபொன்படைத்தால்பொன்னேயாகும் பொல்லாத பாவியென்றால் மண்ணாய்ப்போகும், கண்ணான செயலறிந்தா லெல்லாமுண்டு கருவான குருவறிந்தா லெல்லாங்காணும், விண்ணான பதியறிந்து அடியுங்கண்டால் வேணவிதங்கருவாகச் செய்யலாகும், பெண்ணாசை கொண்டலைந்தோ டிணங்காதையா பொருளாசைக்கொண்டவரைச் சினந்துதள்ளே. 153

சினந்துமிகத் தள்ளுவது என்னவென்றால் செயலில்லாப் புளியுடனே யெண்ணெய்தள்ளு, உணர்ந்துவரு மீனிறைச்சிக் கஞ்சாவாகா உணர்வழிக்குங் கள்ளுசாராயமாகா, மணங்கமழும் பூரணத்தையன்றியொன்றுவாய்க்கடங்காமதம்பேசின்றாயானால் இணங்குவது பூரணந்தான் கடினமாகும் என்மகனே புலத்தியனே யிந்தநூலே.

இந்தநூலாயிரத்துஇருநூறுக்கும் ஏகாந்தமானகருவதிலேதோற்றும், அந்தமுடனாதியென்ற பொருளே தோற்றும் அலையடக்கவென்றதெல்லா மிதிலேதோற்றும், விந்தையுள்ள விநோதமெல்லா மிதிலேதோற்றும் வேடிக்கை விபூதிகளு மிதிலேதோற்றும், தந்திரங்க ளென்றதெல்லா மிதிலேதோற்றும் சாயுச்சிய பதவிகளு மிதிலேதோற்றும். 155

தோற்றாத கருக்களெல்லா மிதிலேதோற்றுந் தாபமுதல் பரிசனமுமிதிலேதோற்றும், ஆத்துமத்தின் கருக்களெல்லா மிதிலேதோற்றும் அருள்பெருகும் பூரணத்தி னருமைதோற்றும், பாட்டான பரிபாஷை மிதிலேதோற்றும் பக்குவத்தின் செயல்களெல்லா மிதிலேதோற்றும், காட்டாத கருக்களெல்லா மிதிலேதோற்றுங் கபடமிட்டு வெகுளிதனி லில்லாதையா. 156

ஐயனே புலத்தியனே யுமக்காய்நாமும் அருள்பெருகு மாயிரத்து இருநூறுக்குள், மெய்யான கருக்களெல்லா மிதிலேசொன்னேன் மேட்டியாய் திரியாமற்குருவைக்காரு, வையகமெல்லாந்திரிந்து அலைந்தாலுந்தான் வாய்க்குமோ இக்கருக்கள் வாயாதப்பா, கையான கையினெல்லிக் கனிபோல்மைந்தா கருவாக இந்நூலை பதனம்பண்ணே. 157

பதனமப்பா வெகுபதனமிந்நூலைப் பாரதனிலேமாந்தருக்கு ஈந்தாயானால், விதனமப்பா சொல்லவே யதிகசாபம் வேண்டினு லுன்னாலே தீர்க்கமாட்டாய், மதனமாய் மவுனமுட னிருந்துகொண்டு மகத்தான அஷ்டமாசித்துமாடு, இதமானபூரணத்தை தினமும்போற்று இன்பமுட னின்னமொரு மூப்புச்சொல்வேன். 158

## வழலைமுப்பூச்சுன்னம்.

சொல்லக்கேள் புலத்தியனே வழலைதன்னை சுத்தசெங்கை தன்
னிலே சுத்திபண்ணி, விள்ளக்கே ளுஞ்சுதாஞ் சுத்திபண்ணு வெண்
மையென்ன சொல்வனடா வுவமையில்லை, கல்லானவழலைதனை யெ
டுத்துமைந்தா கருவாக இடைசமனாய் வீரம்பூரம், வல்லமையாய்க்
கல்வமதிலிட்டுமைந்தா வரிசையுடன் வெடியுப்புத் தன்னாலாட்டே.

ஆட்டிநன்றாய் பில்லைசெய்து வட்டுப்பண்ணி அருள்பெருகு
மண்சீலை யதின்மேற்செய்து, காட்டான எருவதனிற் புடத்தைப்
போடு கனலாறியெடுத்திடவே சுன்னமாகும், தேட்டானதேட்டாகு
மிந்தச்சுன்னந் திருவான சிரிசியுந் தாரந்தன்னில், பூட்டாதகவச
மது நன்றாய்ச்செய்து பொருந்தவே மண்சீலை யேழுஞ்செய்யே.

செய்ததொரு கவசமதைக்காயப்போட்டுச் சிவசிவாவென்றெட்
டுவிற் புடத்தைப்போட்டு வைத்துள்ள தாரமதுகட்டிநல்ல சோதி
யுள்ள அருணனைப்போ லிருக்குமப்பா, பையவே கட்டியதோர்தா
ரந்தன்னைப் பாய்ச்சடா வெள்ளிதனிற்பத்துக்கொன்று, அய்யனே
புலத்தியனே சொல்லக்கேளு அன்பாகப் பண்ணிரண்டு மாற்று 161
மாச்சே.

ஆச்சப்பா குடவணிலே யெட்டுமாத்து அரசார செம்புதனிலா
றுமாத்து, பேச்சப்பாவெள்ளிசெம்பு தன்னிலேந்தால் பிசகாதனட்
டரைதான் பேணிப்பாரு, ஏச்சப்பாவெகுநேச தாரக்கட்டு நேர்மை
சொல்ல என்னாலே கூடாதையா, காய்ச்சப்பா மூலமென்ற தீயில்
தன்னைக் கருணைபெற மேல்மூலச் சுடரிலில்லே. 162

## சவுக்காரப்போக்கு.

நில்லப்பா சவுக்காரஞ் செய்யுமார்க்கம் நிலைபெறவே சொல்லு
லுகிறேன் மைந்தாகேளு, வல்லதொருகுளக்கரைவாழ் பிண்டந்தா
னை மகத்தானசிப்பியடா குப்பிடானை, விள்ளாமல் விண்ணுகிறேன்
பூமிநாதம் விரையான அடிமுடியும் இப்பிப்போக்கு, சொல்லைமற்
சொல்லுகிறே மாதியந்தஞ் சொரூபமுள்ள வஸ்துவையே வணங்கிப் 163
போற்றே.

வணங்குவது எப்படித்தா னென்றால்மைந்தா மயானமதினிலே
வேலை தன்னிற்சென்று, இணங்குவதால் ருத்திரனைப்பணிந்துபோ
ற்றி இன்பமுடனைவசமேசெய்துகொண்டு, குணங்களொருமன
தாக வயிரவனைப்போற்று குணமான ஆள்வள்ளிக் கிழங்குதன்னை,
முணங்காமல் நருக்கியதைப் பாண்டத்திட்டு முன்னீரதுபிட்டு 164
அவித்திடாயே.

அவித்ததொரு கிழங்குதனை யெடுத்துமைந்தா அடிகனத்த வுர
ல்தனிலே யிட்டுக்கொண்டு, குவித்ததோ ரிருப்புலக்கைத் தன்னாற்

சொன்னேனே ஆயிரத்தி யிருநூறுக்குள் தொடுகுறிபோல்
குருமுடிக்க வகையுஞ்சொன்னேன், முன்னான காவியத்தில் சகல
சித்து மூர்க்கமுடனே பாடினநூ லார்தான் காண்பார், கண்ணான
பரிபாஷை எல்லாந்தோற்றுங் கருவான கருக்களெல்லாங், காணுங்
காணும், என்னுடனே யிந்தநூல் கடினமாக இருக்குமென்று சொல்
லாதே யிருத்திப்பாரே. 600

இருத்திமெள்ளப் பார்க்கையிலே ஒளிதான்வீசும் என்னசொ
ல்வேன ஒளியிலே வெளிதான்காணும், தருக்களென்றகருக்களெ
ல்லா மிதிலேகாணுஞ் சதாசிவனு மனோன்மணியு மிதிலேகாணும்,
குருக்களென்ற பராபரத்தின் குறியுந்தோன்றுங் குணமான குண்
டலியு மெதிரேகாணும், கருக்களென்ற கருக்களெல்லாமிதனிற்றோ
ன்றுங் கற்பூரதீபமதைக் காணுகாணே. 601

## ஞானமார்க்கம்.

காணுதற்குக் கருவானஞானமார்க்கம் கருத்துறவே சொல்லு
கிறேன் மைந்தாகேளு, பூணுதற்குச் சொல்லவில்லை காணுமாம்பார்
பொன்கோடி யிந்தாலும் நூலீயாதே, ஊனுதற்குக் கருத்தாகக்
கற்பங்கொண்டு உற்பனமா யடிநடுவின் முடிவைப்பார்த்து, தோ
ணுதற்குத் தோணுமடா ஞானமார்க்கஞ் சுருதிமுடிவானபொருள்
சொல்லுவேனே. 602

சொல்லுவேன் அஞ்செழுத்து அஞ்சுமுகமானால் சுருக்கான
ஆறுமுகமெங்கென்றுகேட்டால், வெல்லுவேன் புலத்தியனே சொ
ல்லக்கேளு வேதாந்தசுருதிமுடி வாறுகலமாகு, நல்லுறவரம் நேச
கபூரசமுமின்று நன்மையுடன் வீற்றிருக்குங் கும்பகமேயாகும்,
புலனுறவாய் நின்றபனி மணிபோலாகும் புகழாவ மணிபோலும்
நாதகுருவாமே. 603

நாதமென்ற அஞ்செழுத்துக் சாதாரமான நடுவான பூரணக்
தா ரூறெழுத்துமாகும், பேதமென்றே பேதமெல்லா மெழுத்தே
யாகும் பிசகாது அஞ்செழுத்து மூன்றெழுத்துமாகும், கோதமெ
ன்ற குற்றமில்லா குருமணியுமாகுங் குருவான மூலமணி கிரீடமா
கும், வேதமென்ற மலர்க்கொழுந்தின் வாசமாகும் வாசமுண்டு
வாசமில்லா நேசமாமே. 604

நேசமுடனிருப்பவர்தான் மைந்தாமைந்தா நெறிபெற்ற ஆறு
முக மவரேகாண்பார், பாசமற்ற பெரியோரும் பணிந்துநின்று
பாமகுரு வானதொரு ஆறுமுகமாகும், வாசமுற்ற நவக்கிரகத் தா
கியான வலுவான அனுக்கிரக மாறுமுகமப்பா, தேசியென்ற சிவ
தலமு மாறுமுகமாகும் தெவிட்டாத மதியமுத மாறுமுகமாமே.

ஆமப்பா பூரணத்தி னருளைப்பற்றி அப்பதியிற் கால்நிறுத்தி
அதின்மேல்நின்று, ஏமப்பா மூலமென்ற நாடிதன்னால் ஏளியாமல்

சுழிமுனையென்ற நாடிதன்னால், நாமப்பா அதிற்பூட்டி ரேசகமேபண்
ணித் தன்மையுடன் பூரகமாய் நின்றுகொண்டு, சோமப்பா பூரண
த்தைக் கொண்டாயானால் சிவசிவா ஆறுமுகச் செயல்காண்பாயே.

காணப்பா ஆதியங்கம் பொருளைத்தானும் கருவாகத் தானறி
ந்து நடுவைப்பற்றி, பூணப்பா ஒருமனதாய்ப் பூணுபூணு புத்தியுட
னுண்டதினால் பொறிகள்தோறும், தாமப்பா தன்மயமாய் நின்ற
பொறிதன்னில் சக்கரமு மட்சரமுந் தானேதோற்றும், தேனப்பா
அமுதமென்ற அமுதந்தோன்றுந் தெளிவான அமுதமுண்டு தெளி 607
ந்துபாரே.

தெளிவான மனத்தோர்க்கு இந்நூல்வேணும் சிவயோக மாவ
தற்கு இந்நூல்வேணும், அழியாத சித்தர்க்கு மிந்நூல்வேணும் அறி
தான மவுனர்க்கு மிந்நூல்வேணும், வழியான வழிதுறைக்கு மிந்
நூல்வேணும் வான்தீபம் நோக்குதற்கு இந்நூல்வேணும், தெளி
தான நூல்களுக்கு இந்நூல்வேணும் நேரான பணிமண்டு நூனறப் 608
பாரே.

பாரப்பா பதியறிய இந்நூல்வேணும் பரயோக மென்பதற்கு
மவுனம்வேணும், காரப்பா சிவம்வேணுஞ் சித்திவேணுங் களங்கம
றச் சற்குருவைக் காணவேணும், சாரப்பா சமாதிகற்பஞ் சமாதி
வேணுஞ் சதிராக நந்தியுட நாட்டம்வேணும், ஆரப்பா அறிவார்
கள் ஞானமார்க்கம் அப்பனே பூரணத்தை யழுத்திப்பாரே. 609

பார்க்கையிலே அண்டபிண்டமெல்லாம் பண்பாகப் பூரணத்
தினுதித்தவாறும், கார்க்கையிலே பூரணத்தினருவிபாய்ந்து கற்பூடு
தாபரங்கள் பதித்தாப்போலே, சேர்க்கையிலே மதிதானுந் தெளி
வாய் மைந்தா சேருமடா சூரியனி லொழியப்போறூர், ஏர்க்கையு
டன் அகாரமதி உகாரந்தோணி இப்பமுள்ள மகாரமொடு விந்து 610
நாலே.

நாலானவிந்துவிலே அனந்தன் சோமன் நாடிப்பார் திரோதி
யொடு நாதாந்தந்தான், மேலான வுகாரமதிற் சத்தியோடு வியானி
யுஞ்ச மனைமுதலுடன் மனை தாணப்பா, சேலான கருணைதருமைருபி
சேர்க்கையுள்ள அனந்தைமுத னைதயோடு, காலான அறுதிசிழு 611
னைத்துத ஓந்தான் கண்டுபார் சிவகலையைக் காட்டினேமே.

ஆமப்பா சோடசத்தின் கலையுள்ளாகி அருள்தீபம் நோக்குத
ற்குத் திறவுகோல்தான், ஓமப்பா வுகாரந்தான் மின்போல் மின்ன
மூலமென்ற நாடியிலேமுழங்கிநிற்கும், ஈமப்பா அகாரந்தான் னிரு
தயத்துள்ளே நாடியே அக்கினிபோற்பிரைதவீசும், தாமப்பா மகா
ரந்தான் கண்டத்துள்ளே தயவானபதிகோடி காந்தியாமே. 612

சாந்தியாம் விந்துவப்பா மின்போல்வீசி கண்டமேல் அங்குலம்
நால்கடந்துகாணும், சாந்தியாம் புருவநடு சார்ந்தசலந் சந்திரன்
போல் வீசமக்குஞ் சம்புக்காணும், பாக்கியமாய்த் தினந்தோறும்
பழக்கமாகில் பார்மகனே கற்பூரத்தேகமாகும், சேர்ந்துபார் இத
ற்குமேல் அங்குலமூன்றனால் செப்புகிறேன் சோடசத்தின் கலைகா
ணுமே. 613

ஆமப்பா பூசைபோலே தூபமாம் அதிலேறிட சேர்ந்தா
க்கா லுங்கன்தேகம், போமப்பா கத்திரி அதற்குமேலே புகழாக
மூன்றுவிரற் கடந்தாயானால், ஓமப்பா நாதகலை மாணிக்கம்போல்
ஒளிவீசுங்கால்மாறி ஊணிப்பாரு, நாமப்பா நாதாந்த உச்சிமீதில்
நாடுவாய் மின்கொடி யொளிபோலாமே. 614

ஒளியாகு மாத்திரைதானைக்கால்வைத்து ஊணிப்பார் பிடி
த்தவிடம் பொய்யாய்ப்போகும், அழியாத பேரின்ப மோட்சவீடு
அது கடந்து அங்குலம்நா லப்பாற்செல்ல, கழியாத சத்திகலை ரவி
போல்மின்னி தோன்றுமடா மாகாணிமாத் திரைதான்வைக்க, தனி
ர்பாய்ந்த சுடர்போலே புத்தன்தேகந் தானுருகுஞ் சத்தியடி மருவிக்
காணே. 615

மருவியே அங்குலம்நால் கடந்துபார்த்தால் மைந்தனே வியா
பினியுங் கலைதானின்று, அருவியே ஆதித்த னொளிபோல் வீசும்
அரைக்காணி மாத்திரைதா னங்கேயும், பரவியே பூசித்தா லுந்
தன் தேகம் பானுவைப்போல் காந்தியதாய் பத்திப்பாயும், மருவி
யே தோத்திரஞ்செய்மவுனத்தாலே மகத்தானசித்திமுத்தி வருகுந்
தானே. 616

தானென வுச்சிவெளி கடந்தப்பாலே சமனைகலை தனதளந்து ரவி
போல்மின்னும், மானென மாத்திரைதான் கால்மாகாணி மனக்கண்
ணால் தன்கண்ணால் மருவிப்பாரு, தேனென தேகமப்பா ஒளிபோல்
காணுந் திறமாக உன்மனியை மேவிப்பாரு, கோனென ரவிகோடி
ஒளிபோல்வீசுங் குணமாக அரைக்காணி மாத்திரைதானேதே.

ஓமப்பா ஒளிபோலே புத்தன்தேகம் ஒன்றுமில்லைப் பிடித்த
இடம்பொய்யாய்ப்போகும், நாடப்பா அண்டபிரண்டமெல்லாம்
நாடலாமோடலாமனேகஞ்சித்தி, நீதப்பா ஆதாரமாறில்நின்றுன்னிலை
த்தகப்பாதேகமது கற்போல்காணும், வாதமப்பா பாக்கியமாம்
வாசிமூலம் வரைந்தாக்கால் சமாதிக்குள் வழியுமாச்சே. 618

ஆச்சப்பா இதிலொன்று தப்பிவிட்டால் அகாரணத்தேகத்தா
பொய்யாய்ப் போகும், மாச்சப்பா போகாதே மைந்தா சொன்
னேன் மந்திரந்தா னறிவாய் மைந்தனேநீ, மூச்சப்பா நிற்காம
மதனுள்வீச்சு மூட்டினால் திரிகோண முனையுங்காணும், [illegible]

தருகுமப்பா சிவவாலை எழுத்துக்கூட்டித் தாக்கிறு லஷ்டகர்
மந் தானேயாகும், வருகுமப்பா வாதசித்தி காயசித்தி மகத்தான
யோகசித்தி ஞானமெய்தும், உருகுமப்பா ரீங்கார மதனிற்பூட்டி.
ஒருகோடி நூல்களிலே யொளித்தாரப்பா, பருகுமப்பா சிவவாலை
எழுத்தைமாறிப் பாடினார் சாத்திரங்கள் பார்த்துத்தேரே. 626

தேரவே சத்திசிவ மிந்நூல்காட்டுஞ் செகத்திலே யிந்நூல்போ
ல்செப்பாதையா, கோரவே ஆயிரத்தெண்மருக்குள்ளே யிற்குசடோ
அமுதமங்கே நீதான்கொள்ளு, கூறவென்றால் காவேதுபாலகேது
கூடினுல் வாசிசென்று வெளிபோற்காணும், ஆமேவ சொல்லினை 627
ந்தோ மஷ்டசித்து அருளான பூரணமும் பூசைவிதிதானே.

தாமென்ற இட்சைசித்தி சாக்குவைப்பு தயவான மெழுகுசீர்க்
காரமெல்லாம், ஊமென்ற தயிலமொடு கடுகுகற்கம் உப்பான பற்
பமொடு செந்தூரங்கள், கோமென்ற இந்திரமயேந் திரசாலங்கள்
கோசாணங் ககணமப்பாகேளு, நாமென்ற ஆணவத்தா லிந்தநூலை 628
நாட்டினேன் செகத்தோர்க்குக் காண்பியாதே.

காணப்பா இட்டெவது மிதரா மிந்நூல் கருவாளி கண்டக்காது
மிர்போற் காண்பார், வீணப்பா வென்றுநீ மறதியாலே வெகுளி
விட்டு இந்நூலைப் பேசவேண்டாம், ஊணப்பா ஆதியென்ற கறபங்
கொண்டு உரைத்துமிகச் கேசரத்தி லுன்னிப்பார்த்து, தேணப்பா
வெனறவொரு அமுதங்கொண்டு திறமானமவுனமனதக்காருகாரே.

காரப்பா குருபதத்தி லருளேநோக்கிக் கமலமென்ற மூலமதி
லிருந்துமொண்டு, வீரப்பா செய்யாமல் கும்பகத்தேகிலமு விசை
யாக பூரகத்தால ரேசகத்தைப்பாறு, நேரப்பா கினமுதொட்ட
விடமசைக்க நேரான ரேசகத்தா லசையும்பாரு, ஆரப்பா அறிவா
ர்கள் கோகாணவித்தை அப்பனே தொட்டவிடஞ் சுழிக்கும்பாரே.

## கெசகரணம்.

பாரப்பா கெசகரணஞ்சொல்லக்கேளு பங்கான பூரணத்தைப்
பற்றிக்கொண்டு, நேரப்பா மூலமென்ற சுழியைநாட்டி நேர்சரியாய்
ரேசகத்தால் பூரகத்தைப்பற்றி, தேரப்பா கும்பகத்திலதின் முன்சொ
ண்டு திறமாக விசைநாடி யசைக்குமப்போது, சேரப்பா செவிரெண்டி 631
மசையும்பாரு செப்பக்கேள் கெசகரண மாகுந்தானே.

தானென்ற மந்திரமாஞ் சாலவித்தை தயவான கோகாணன்
கெசகரணமப்பா, மானென்ற சாலத்தி லனேகஞ்சொன்னேன் மக
த்தான சித்திரவித்தை யனேகஞ்சொன்னேன், ஊனென்ற கருவி
த்தை யனேகஞ்சொன்னேன் உண்மையுள்ள சுன்னமது ஒடுக்கிச்
சொன்னேன், தேனென்ற செயநீருத் திராவகமுஞ் சொன்னேன் 632
செயமான பன்னிரண்டு நூலுக்குள்ளே.

பண்ணிரண்டின் காரகமடையர் தானும் பாவமென்ற வஞ்சக
மேசெய்வாரெய்வார், புண்ணியமே தானீனையார் போதமில்லார்
போதமில்லாப் பாவிகள்தான் குடிகெடுத்துச்செய்வார், கண்ணிமைக்குள்
குற்றமென்று கருத்தாய்க்காணார் கடைகெட்ட பாவிகள்தான்வஞ்
சகமேதென்று, குண்ணியமேதான பாவமென்றும் கொடுமைசெய்வார்
குடிகெட்ட சண்டாளர் தனக்குத்தேகளே. 633

## சத்துருமாரணம்.

கேளப்பா சத்துருமாரணத்துக்குச்சொல்லேன் கொடியான நாய்
மயிறுடைவாங்கி, தாளப்பா பதினாறு மடிப்பதாகத் தன்னையு
டன் தான்மடித்து அதின்மேற்சேர, தேளப்பா ஐம்கோலமையா
ல்மைந்தா சிவசிவாசத் துருவின் பெயரைகட்டி, கேளப்பா ஐங்கா
யமதின்மேற்பூசி கொண்டேபோற் சுற்றியதைப் பத்துபண்ணே.

பண்ணியதோர் பத்துதனை மயானத்தின் பதியிருக்கு மிட
ந்தனிலே குண்டஞ்செய்து, உண்ணியே கிழிமேலே தன்னிற்சென்று
ஓமம்வளர் குண்டமதிற் பதியவைத்து, செண்ணியத் தானேயா
ஸ்நானம்பண்ணிச் சிக்கிரத்தில் திருவோணத் துடனேமைந்தா, தன்
னிமையா வேசுடலைந்து சாம்பத்தன்னில் தாம்பிரண்டு எழுந்திரு
ந்து தம்பனமேசெய்யே. 635

செய்யப்பா குண்டமதின் கிட்டவந்து சிவயமென்று தெற்கு
முகமாகிநின்று, பையப்பா யவசியென் நிருத்துமைந்தா பக்குவ
மாய் வசிவமென்று அனலைவைத்து, மையப்பா ரெண்டுவகை எரு
வால்மைந்தா மாத்ரனை அனல்மூட்டி மைந்தாகேயும், மெய்யப்பா
நெய்யென்ற கெசமிழி நெய்யால் மென்பாடா நசியமென்று ஓமம்
பண்ணே. 636

பண்ணப்பா ஓமமது கடிகைக்குள்ளே பாக்கான சாராயந்தன்
னைவாங்கி, விண்ணப்பா தாமேறுக்கி அதனிலிட்டால் வெகுசுருக்
காய்த் தீபிடிக்கும் அப்போமைந்தா, எண்ணப்பா தான்மூடி மன்
னைவாரி கருகுவாயென்றுமி கலக்கப்போட்டு, உன்னப்பா நதிக்
கரையில் ஸ்நானம்பண்ணி உம்மெனவே தானிருக்கு மிடத்திற்செ
ல்லே. 637

செல்லவே நாளுக்கு நாளாய்மைந்தா செடங்கைத்து அனல்
மீறிதேகத் தள்ளே, சொல்லவேபதிமிறக்கு மிடமாய்மைந்தா தொ
ல்லுலகிலுய்யபோலே கழுன்றமானப்பர், அள்ளவேசெயலற்று நடப்
பார்மைந்தா எருக்கான கருவித்தை சொல்லானதையா, சொல்லவே
வினைத்தொரு பகைவனைமைந்தா வொட்டிறல் தோஷமில்லை எனச்
சொன்னோரே. 638

சொன்னாரே என்குருவும் புலத்தியனையா தொடுகுறிபோல் மூப்பொருளுந் துலக்கமாக, கண்ணாக் காண்பித்தோ வைவனையா காண களங்கமற்ற சற்குருவைக் காருகாரு, எங்கோஞ் சற்குருவை மனைதிற்கா ணை இயல்பொன்று சொல்லுகிற இன்பங்கேளு, பொன்னான பொருள்போலே யவரைக்காரு புத்தியுடன் வாமனத்தைக் கனியப்பாரே. 639

கனியான பலருசியும் புசிக்கும்போது கால்திட்டமீந்திடுவாய் குருவுக்கப்பா, தனியாக நிக்கையவு வைத்தாயையா தாய்தந்தை போலவுமே தயவுமாவார், ஐனியாதமோட்சகதி வருளுஞ்செய்வார் ஜடம்பிலக்க அமுதாசஞ் செலுத்திவைப்பார், மனியான சிரோமணியின் மணியையீவார் மகாமந்திர சொரூபியென வசனிப்பாரே.

வசியம்.

பாரப்பா சத்துருமா ரணத்தைச்சொல்வேன் பண்பான வசியமொன்று பகரக்கேளு, நேரப்பா மந்திரத்தால் வசியமொன்று நிலைத்தவொரு கருவுமையால் வசியமொன்று, ஆரப்பா அறிவார்கள் ரெண்டுவிதந்தானும் அப்பனேமந்திரத்தால் வசியக்கேளு, மாறப்பா சத்திசிவ மிரண்டுங்கூட்டி மார்க்கமுடன் மாயவதால் வசிகைகேளே. 641

கேளப்பா இடதுகையில் விபூதிவைத்துக் கெணிதமுடன் பரப்பியதிற் சுழியும்மாட்டி, ஆளப்பா சகாணியம் பார்த்துக்கொண்டு அங்பாகச் சிவசிவவென் றறிந்துமாறி, கோளப்பா ஒன்றுமில்லை பமைதான் வெல்லுங் கூர்மையுடன் விபூதியைநீ குறிப்பாய்பூசி, வாளப்பா மீதமுள்ள விபூதிதனை மைந்தனே யுன்னுக்குப் புசித்திடாயே. 642

புசித்திடுநீ மைந்தாகேள் இனமுமையா புத்தியுட னீயிருக்கப் பலமேனுமெல்லாம், பசித்திடுவார் தாகமது போலேமைந்தா பாரரு மாசன்முதல் தேவதைகளெல்லாம், நசித்திடும்ஸ்திரீவசியம் வசியமெல்லாங் கண்காணத் தேறுமடா கருவாய்ப்பாரு, நசித்திடுமே விரோதமய மானதெல்லாம நன்மையுட னிரண்டெழுத்தை நயமாய்ப்பாரே. 643

பாரப்பா ரெண்டெழுத்தும் நயமாகும் பாங்காக ரெண்டையுமே சுழினைபேற்றி, காப்பா ரேசகபூ ரகந்தான்ரெண்டுங் கருத்தறவே கும்பகதில் காக்கப்பண்ணி, வீரப்பா செய்யாமல் மைந்தாகேளு வேண்டினதோர் கோமெலாங் கணம்போலாகும், ஆரப்பா அறிவார்கள் சிவயோகவாழ்க்கை அப்பனே புலத்தியனே யின்னங்கேளே. 644

இன்னங்கேள் சிவயோக வாழ்க்கைதன்னை இயல்பான நயமதை மேருக்கேற்றி, சொன்னதொரு கயிலாசமேருதன்னில் கடர்

கோடி காந்தியாய் ரவிதான் வீசும், மன்னவனே காந்திக் கட்புற த்தைத்தின்ற பசேனன்மணியில் கருணைதனை யென்ன சொல்வேன், பின்றான ஒளியில் ஒருபீன்தாண்டேதான் றும் பினெனாளியிலுன்மனை னை தேமேஸிப்பாரே. 645

## சீனவைப்பு.

பாரப்பா சாக்கிறுடை வைப்புகேளு பாருப்பு தன்னுடனே கல் லுப்புக்கூட்டி, ஊரப்பா பழச்சாறு தவிருக்கூட்டி உடன்சேர்த்து பாண்டத்தில் விட்டுமூடி, காரப்பா குழிவெட்டி எருவைப்போட்டு கருவான பாண்டமதை யதின்மேல்வைத்து, சேரப்பா எருப்போ ட்டுச் சமாதிவைத்தால் திறமாகமண்டலத்தில் சீனமாச்சே.

## பூரவைப்பு.

ஆச்சப்பா பூரத்தின் வைப்புக்கேளு அரகர சீனமொடு காரு க்கூட்டி, கீச்சப்பா குகதிரிக்க இடைதானஞ்சேர்த்து கிளவாகத்தா ன்பொடித்து செயநீர்விட்டு, மூச்சப்பா போகாமல் தாய்தாலைகூ ட்டி மூனைவலைத்தானபணிந்து குப்பிக்கேற்றி, பாச்சப்பா நெல் லவிக்கும் பானைதன்னில் பக்குவமாய் வைத்தெடுக்கப் பூரமாச்சே

ஆச்சப்பா பூரமது காரமென்பார் அன்பான சவுக்கார வழலை யென்பார், காச்சப்பா ரவிபிரமென்பார் சித்தர் கருவான அக்கினி யின்கோரமென்பார், பாச்சப்பா வாதத்துக் கிவைவிட்டால் பா யாது சாக்கொன்றும பழக்காதையா, கீச்சப்பா கடுசீச்ச ரவியின் மைந்தா நெறியான ரவிபூவதியார் நிலைத்திடாரே. 648

கிலையாது கன்னத்துக் கிதில்லைவிட்டாக் கோரான குளிகை க்கு மாருமாரும், நிலையான கற்பத்துக் காதிபீடஞ் சேர்க்குகின்ற மெழுகுக்கு மாதிபீடம், அலையான செயநீர்க்கு மாதிபீடஞ் சுருக் கான பூத்தாக் காதிகேளு, விலையான வெண்கார வைப்புக்கேளு மேதினியி லாறிலார் லனைப்போக்கே. 649

## வெண்காரவைப்பு.

போச்சான விலைப்புசல்லுப்போடு புசமூனைபடிகத்தா னண்ட வித்து; தாக்கான மணிஉருந்து மாவேரொடக்க தனிகள்ளிப் பா ல்வார்த்துக் கின்டிமைமந்தா, ஆக்கான பானைதனி விட்டுமூடி அரு மையுள்ள பெருநீருக்கூடவிட்டு, நீக்காமல் மண்டலந்தான் சமாதி வைத்தால் நிலைத்ததொரு வெண்காரப் பலகையாச்சே. 650

ஆச்சப்பா வெண்காரந்தன்னுல்மைந்தா அப்பனேயுண்டாச்ச சாக்கோகோடி, காய்ச்சப்பா வருக்கினதுக் காதியாகும் கருவான வேதைக்கு மாதியாகும், பாய்ச்சப்பா சத்துகளுக் குயிரோயாகும்

பாங்கான நீருக்குங் கன்னைத்துக்கும், பேச்சான வெடியுப்பு சினம் ரெண்டில் பிலமான வுருந்தினிட மாவைச்சேரே. 651

சேரப்பா கள்ளிப்பால் விட்டுநன்றாய் திறமாகக் கிண்டிநன்றாய் பாண்டத்திட்டு, நீரப்பா விட்டுநன்றாய் சமாதிவைத்தால் நிசமாகத் துய்யமிற வெண்காரமாச்சு, காரப்பா வெண்காரம் பொரிக்காரம்ரெண்டில் கருவாளி தானறிவார் மற்றோர்காணார், பேரப்பாசொல்லவென்றால் நாவேவாயில்லை பிசகாத சாரத்தைச் சொல்லக்கேளே.

## சாரவைப்பு.

சேளப்பா கர்மாவுஞ் சிறுமாவோடு கொடியான அமுரியோடு ஆவின்நீரும், நீளப்பா அனுகலகை நீறுங்கூட்டி நிலைத்தவெடியுப்புடனே கல்லுப்புச்சுண்ணம், வேளப்பா எரிதரோனைத்தியானஞ்செய்து விசையான நீர்நின்ற படியேதாக்கி, கோளப்பா வாராமல் பாண்டத்தூட்டிக் கோணென்ற இடமதிலே சமாதிவையே. 653

வையப்பா மண்டலத்துக் கப்பால்நீயு மைந்தனே சார்வாகவெடுத்துப்பாரு, மெய்யப்பா சொல்லுகிறேன் காரஞ்சாரம் மெய்யான சாரமதை யார்தான்காண்பார், வையப்பா வுதவுவதுபோலே மக்கள் கைப்பான வெப்புக்கு வுறுதியாச்சு, எய்யாதசாரைகடி பட்டுதானால் எழும்பாமல் விறடக்குஞ் சாரந்தானே. 654

சாரவென்றால் வழலைநடிக் கொண்டுதானால் சரக்கனைத்து மாண்டிடாது தப்போயில்லை, சாரமென்ற கருவழலைக் கடிதானப்பா கடுஞ்சாருக்குச் சாரத்துக் கதிகமாகும், பாரமென்ற சாரமதைப் பணியவேணும் பணிந்தொரு சாரத்தால் கிறுத்தவேணும், ஆரமென்ற அதிசார காரமப்பா அனைத்துயிருக் குடலுயிரே யறிந்துபாரே. 655

பாரப்பா வாதத்துக் காதியாகும் படியேற வைத்துக் காதியாகும், காரப்பா கறபத்துக் குயிரேயாகுங் கருவானசெயநீர்க்குமாதியாகும், நேரப்பா பூரணத்துக் குயிர்தானாகி நினைவான அறிவுக்கு மமுதமாகி, தேரப்பா காரசாரத்தைக் கண்டு தேர்ந்துமனதொன்றான செயலைப்பாரே. 656

## துரிசுவைப்பு.

பாரப்பா துரிசுடனேவைப்புக்கேளு பாங்கானகல்லுப்பு சினங்கூட்டி சாரப்பா பழச்சாறுங் குயிருங்கூட்டித் தன்மையுள்ள அமுரியதுங் கூடச்சேர்த்து, சேரப்பா தாம்பிரப்பாத் திரத்திலமைத்து செம்மையுடன் குழிவெட்டி மைந்தாநீயும், காரப்பா கெரிமி யனருலைக்கொட்டி கருவான பாத்திரத்தை யதின்மேல்வையே.

வையப்பா வாய்மூடி மேலுங்கொட்டி வளமாகத் தான்மூடி
மைந்தாகேளு, மெய்யப்பா சதாசிவத்தைப் போற்றியும் மோன
மையுடன் மண்டலத்துக் கப்பால்வாங்கி, செய்யப்பா ஆறவிட்டுத்
திறந்துபாரு சிவசிவா என்சொல்வேன் துருசேர்மை, நையப்பா
புளிப்புடனே புளிப்புசேர்த்து கழிவான கருப்புடனேசேர்த்துபோ 658
ச்சே.

போச்சப்பா களிம்புடனே யுப்புசேர்த்து பொருமியிருந்தாலு
மைந்து துருசியாச்சு, ஆச்சப்பா வெகுதுருசு துருசியாட்டு அடங்
காத சுண்ணத்துக் காதியாகும், மூச்சப்பா வெகுதுருசு செவுணம்
பாயும் மூதண்டகுருவுக்கு இதுவேயாதி, நீச்சப்பா வெகுநீச்சு துரு
சார்காண்பார் நெறிபெற்ற சற்குருவுக் கடியாம்பாரே. 659

அடியென்பார் கண்டரென்பார் விஷமியென்பார் தலங்குபச்
சை அக்கினியின் பீசமென்பார், அடிகொண்ட அடியென்பா ராதி
யென்பார் அரகரா ஆதிக்கு அந்தமென்பார், கடிகான சத்தியென்
பார் நீலமென்பார் காமனுக்குச் சத்துருவான் கண்ணேயென்பார்,
மூடிகொண்ட ஆகாசமுதலேயென்பார் முத்திவெகு துருசாகுமுத
லைப்பாரே. 660

## பாஷாணவைப்பு.

பாரப்பா சினமொன்று வெடியுப்பொன்று பாமான லிங்குட
னே மூன்றுங்கூட்டி, சேரப்பா தாம்பிரக் கின்னத்துள்ளே சேர்க்
கையிலே கேசரியின் நெய்யைவார்த்து, நேரப்பா மேற்கின்னத்
தாலேமூடி சிலைத்தகொரு பாண்டத்தில் மண்ணும் விண்ணும், கா
ரப்பா பாண்டத்தி லிட்டுநல்ல கருவாக வட்டகையை யதின்மேல் 661
வையே.

வைத்ததின்மேல் முன்போலே நிறையக்கொட்டி வாகாக மே
ல்மூடி மண்ணுஞ்செய்து, வித்தாரமாகவே யடுப்பில்வைத்து வீற
டங்க வொருசாம மெரிப்பாய் மைந்தா, முத்தான நிறம்போலே
நாலுஞ்சேர்த்து மெழுகுபோ லுருகியது வொன்றாய்ச்சேரும், பத்
தான பூரணத்தைத் தியானம்பண்ணிப் பதமாக ஆறவிட்டு எடுத்து 662
ப்பாரே.

பாரப்பா வட்டகைக்குள் ளிறுகிநல்ல பளிங்குபோல் பாஷா
ணம் பண்பாய்க்காணும், ஆரப்பா அறிவார்கள் பாஷாணத்தை
அறிந்தவர்கள் ளறிவார்க ளம்பரத்தை, மேரப்பாஎன்பார்கள் வெ
ண்கண்டரென்பார் விசையான மதியென்பார் நிலவுப்பென்பார்,
சாரப்பா சாரைக்கு நாகமென்பார் சகலசரக்கானதற்குஞ் சத்துரு 663
ஆனென்பாரே.

பார்க்கவென்று லெந்தனுட காவியத்திற் பக்குவமாய்ச்சரக்கு
வைப்பு முறைமையைச்சொன்னேன், மார்க்கமுடனேந்நாற்றில் கட்டு

முறைபோடு மகத்தான நானூற்றில் மெழுகுமுறை சொன்னேன், சேர்க்கையுடன் எண்ணூற்றில் திராவகத்தோடு செப்பமுள்ளமுன் னூற்றில் செந்தூரஞ்சொன்னேன் கார்க்கவே கற்பமுறை ஐந்நூற் றில்சொன்னேன் கருணையுள்ள புலத்தியனே யின்னங்கேளே.

கேளப்பா கற்பவகை நூற்றில்சொன்னேன் செர்வமெல்லாந் தானடங்க எழுநூறும்பாரு, ஆளப்பாலோகமா ரணத்தைத்தானும் அப்பனே எண்பதுக்குள் ளடக்கிப்பாடி, தேளப்பா கொட்டுதல்போல் வழியுஞ்சொன்னே னிரும்பவொருநூற்றிலேதான் திறமாய் மைந்தா, கோளப்பா வாராமல் சத்துருமித்துரு குணமாகச் சொ ன்னதையார் கொடுப்பார்பாரே. 665

பார்த்தவர்கள் மனங்களிய டைந்தாயானால் பஸ்பாக முறை கள் தவறுமலேயா, கார்த்தவர்க ளிந்திவோ ரப்பா சொன்னேன் கனகம்வெகு யிந்நாலு முறைசொல்வார்கள், நாற்றிசையு மறியவே தா னிந்தநூலில் நலமாகக் கைமுறைகள் நன்றாய்த்தோணும், பூத் தமலர் வாசனைதான் மிகவேதோன்றும் பூவறியார்க் கென்னவரும் புகலக்கேளே. 666

கேளப்பா வுலகத்தில் முன்னோர்தாமுங் கிருபையுட னன்மை தின்மை ரெண்டும்பாடி, வாளப்பா தினமபார்த்து அறியவென்று நன்மையுடன் ஜோசியமும் பதிலேபாடி, கோளப்பா வாரம துல கமீதில் கொட்டினார் சாத்திரந்தா னென்னசொல்வேன், மாளப்பா என்றசொல் லாகாதென்று மானிடர்கள் நூல்முறையைப் பார்த் தார்பாரே. 667

பார்த்தவர்கள் குருமொழியைப் பாராமற்றான் பதரோடே நெல்வாரித் தூற்றுவார்போல், கூத்தான கூத்தாடி சிலம்பங்காட் டிக் கொடிதான நூல்களைத்தான் பழிப்பானப்பா, நாற்றிசையுந் தான்தேடி குருவைக்கண்டு நன்மையுடன்வணங்கியவர் பாதம்போ ற்றி, கார்த்ததினால்பலனுனக்குச் சொல்வேன்கேளு கனகம்போல் நன்மைதின்மை காட்டுவாரே, 668

காட்டினால் நன்மையிலே நின்றுமைந்தா கசடறவே தின்மை கண்டுதேறி, மாட்டினால் சோசியத்தை மனதிற்காணும் மார்க்கமெ ன்ற அமுதத்தைப் பரணம்பண்ணு, நூட்டினால் நாள்திறந்து வுலகத் துள்ளே புதுமைவெகு பதுமைகளைக் கண்டுதேறி, ஆட்டினால் அம் பலத்தி லேறலாகும் அப்பதியிலேறிமெள்ள அமுதங்கொள்ளே.

கொள்ளப்பா பூரணத்தை கொண்டுதேறிக் குணமாக மனத றிவால் குருவைக்கண்டு, விள்ளப்பா வுனதுடைய பாட்டையெல் லாம் விண்டதினால் மனமகிழ்ந்து அருட்பாலிவார், செல்லப்பா அதின்பிறகு சாத்திரத்தைத்தேடி சிவசிவா கண்டதெல்லா மெழு

திப்போட்டு, சொல்லப்பா மனக்கண்ணி னருட்கண்ணாலே சொன்
ன திறல் பொருளடக்கந் தோணும்பாரே. 670

## கெந்திபாஷாணம்.

பாரப்பா கெந்திபா ஷாணந்தன்னைப் பகருகிறேன் புலத்திய
னே பண்பாய்க்கேளு, ஆரப்பா அறிவார்கள் கெந்திசந்தன்னை
அனைத்திலோ யதின்பிறகு செயநீர்வாங்கி, காரப்பா பூமிபுடகாத
ந் தன்னைக்கருவாகத் திசைதம்வாங்கிமைந்தா, சேரப்பா மூன்சொ
ன்ன நீர்மைந்தா சேர்த்துப்பிசுக் கரைக்கவே யனலாம்பாரே.

பாரப்பா அனல்மீறி கடும்போதன்னில் பக்குவமாய் மூப்பு
வுங் காறுங்கூட்டி, சேரப்பா அடிமுடியுங்கூடச்சேர்த்து திறமாகக்
கெட்டியதை மெல்லாய்மூடி, பாரப்பாமண்சீலை வலியச்செய்து மை
ந்தனே அடுப்பேற்றி அலைவிலாமல், காரப்பா அலைவிலாப் பா
ண்டந்தன்னில் கருக்கவே தனல்மூட்டி யெரித்திடாயே. 672

எரிக்கவே மருந்தெல்லாம் பாண்டத்துள்ளே இளகிமெள்ள
வுருகியதைநற்போல்சேரும், தருக்கவே அனலாறும்போதுமைந்தா
துப்பாமனுடைத்துப்பிசுத் தயவாய்வாங்கி, பெருக்கவே பீங்கானிற்
பதனம்பண்ணிப் பெருமையுள்ள மவுனமதாய்க்குருவைப்போற்றி,
உருக்கு வெண்ணெய் இதுவாகுமென்றுமைந்தா உண்மையுடனே
குணமிதை யெடுத்துக்கொள்ளே. 673

எடுத்ததொரு கெந்தியுட மகிமைகேளு என்ன சொல்வேன்
புலத்தியனே அடக்கமாக, தொடுத்தவெள்ளி நாலுக்கு ஈந்தால்மை
ந்தா, சுகமாக வயதுசொல்ல முடியாதையா, அடுத்தொருவர் கெந்
திமுறை கேட்டானுந்தான் அறிவாரென்றுநீ யகலவில்லு, முடித்
ததொரு பூரண மறிவோர்க்கெய்தும் மூர்க்கமூட னிந்நூலைப் பத
னம்பண்ணே. 674

## கெவுரிரசம்.

பண்ணப்பா கெவுரியுட முறையைக்கேளு பண்பானபுலத்திய
னே அறிவுள்ளானே, விண்ணப்பா லவணமொடு காரசாரம் விசை
யான படிகமொடு பூரணமுங்கூட்டி, கண்ணப்பா மஞ்சளென்று
உருவுங்கூட்டிக் கருக்கூட்டி சல்வத்தி லாட்டிநன்றாய், மண்ணப்பா
சட்டிதனில் வைத்துமைந்தா மைந்தனே அடுப்பேற்றி யெரித்தி
டாயே. 675

எரித்திடவே சட்டிக்குள் மருந்துதானும் இளகிமெள்ள வுரு
கியது மஞ்சள்போலே, பெருத்தகல்லுப் போலுறைந்து மஞ்சளா
கப் பெருமையுள்ள கெவுரியென்ற பேரேயாகும், குறித்தபொருள்
ளுதியென்ற கெவுரியாகுங் குணமான கெவுரிரச முறைதானப்பா,

எத்தியே சுருக்குப்பு விறகிலே இதமாகப் பதிணறு சாமமாட்டி, ஆத்தியே பாண்டமதி லுடைத்தமைந்த அதிலிருக்குங் குப்பியைப் பயையாய்வாங்கி, யேற்றியே புடைத்தப்பார் மதியோற்காணும் புதுமையுடன் கின்னிப்பார் கற்போர்காணும், நேத்தியென்ன வயிரம்போல் ஒளியேவீசும் நேர்மையுள்ள வீரனுடை வளமையேகேளே. 683

கேளப்பா மூன்போலே கல்வத்திலிட்டுக் கெணிதமுடன் பொடித்துநன்றாய் மாவதாக்கி, தேளப்பா கொட்டுதல்போல் செயநீர் விட்டுத் திறமாகக் கேசரியைக் குப்பிக்கேற்றி, கோளப்பா வாராமல் பாண்டத்தன்னே குணமாகமுன்போலே குப்பிவைத்து தாளப்பா மேல்மூடி மண்ணுஞ்செய்து அப்பாமலைப்பேற்றி யெரித்திடாதே. 684

எரியப்பா சாமமு சாமமாட்டி எரித்தபதம் கட்டியின்மேல் ஜெல்லைப்போட்டால், பொரியப்பா எழும்பியது விழுந்துதானால் புத்தியுள்ள புலத்தியனே பதந்தானென்று, குறியப்பா மறவாமற் புசைபண்ணிக் குளிரமட்டும் ஙீயிருந்து எடுத்துப்பாரு, வரியப்பா தாளோடி வீரந்தானும் வாகாக இதைமடக்குச் சாக்குமாச்சே. 685

ஆச்சப்பா இன்னமொரு மடக்குச்சொல்வேன் அரகரா மூன்போலே கல்வத்திட்டு, தேச்சப்பா பொடித்திவோர் மாவதாகச்செச்செப்பமுள்ள செயநீரால் மாவைக்கிண்டி, பாச்சப்பா குப்பிதனில் பதனமாகப் பக்குவமாய்த் தானொத்து மண்ணுஞ்செய்து, மூச்சப்பா தாணடங்க சலாகைபோட்டு முக்கியமாய்ப் பாண்டமதிற் பதியவையே. 686

வையப்பா அடுப்பேற்றித் தீமைமூட்டி. வரிசையாய்முன்போலே பெருத்துவைமந்த, வையப்பா அதுசாம மெரித்தபின்பு பக்குவமாய் சலாகைதனைத் திருப்பும்போது, கையப்பாசாயாமல் திதானமாகக் கைமுறையாய்த் திரிகியபின் சலாகைவாங்கி, செய்யப்பா மேல்மூடிச் சீலைசெய்து திறமாகத் தியெரித்து இறக்குவாயே.

இறக்கியபின் றுறவிட்டு எடுத்துப்பாரு இயகிவெகுவனுவாக இருக்குபவீரம், உருக்கமுள்ள வீரமென்னவீரமென்றால் உத்தமனே சவ்வீர மிதுவேயாச்சு, கருக்கவென்ற கருக்கவெல்லாம் வீராயவீரங் கருவாக இன்னமொரு மடக்குகேளு, பெருக்கவே சவ்வீரக் கட்டிவாங்கிப் பெருமையுள்ள செயநீரில் தோய்த்தப்போடே. 688

போடப்பா ரவிமுகத்தில் பத்துமுறைதானும் புகழான வீரமது என்னசொல்வேன், சாடப்பா செயநீரின் வலுவிருலே நாவடங்கா வீரனது வென்னசொல்வேன், தேடப்பா வீரமென்ன திறமேதென்றால் சிவந்தமஞ்சள் நிறமாகுமைந்தபாரு, கூடப்பா மஞ்சள் நிறவீரந்தான் கொடுமையுள்ள கன்னமதில் சிகப்புமாச்சே.

ஆச்சப்பா இவ்வீரஞ் சொச்சிவீரம் ஆரறிவார் கொச்சியுட ஆழ
ந்தன்னை, நீச்சப்பா வெகுநீச்ச கரையோ காணேன் நிலைத்தசன்ன
மகாரமதுக் காதியாகும், பாச்சடா செவுனரச மணிக்குநல்ல பாங்
கான சாரணைக்கு மிதுவேமூலம், வாச்சப்பா வேதையிட வீரம்வே
றும் வலுவான நீரமெழுகுக் காதிதானே. 690

தானென்ற பன்னிரண்டு நூறுக்குள்ளே சகலகலைக் ஞானமே
லா மடக்கம்பண்ணி, கோனென்ற குருமுறையு மடக்கம்பண்ணிக்
கோடான கோடிவிதத்தை குறியுஞ்சொல்லி, தேனென்ற ருசிபோ
லே ஞானஞ்சொல்லி தெவிட்டாத பூரணத்தின் வகையுஞ்சொல்லி,
மானென்ற மவுனமென்ற குறியுஞ்சொல்லி மனமடங்க வறிவுமிக
வசனித்தேனே. 691

வசனித்த இந்நூல்தான் பெருநூற்சப்பா வண்மையுள்ள கரு
க்கமிது பன்னிரண்டுநூறும், நிசனித்த கருக்கமிது கோடாகோடி
நின்றிசையில் மெத்தவுண்டு கண்டுபாரு, பசனித்துப்பாராமல் கரு
வாய்ப்பாரு பார்க்கையிலே யிந்நூல் பருவம்பாரு, திசனித்துக்
கருவாக யிந்நூலைச் செகத்தோர்க்குச் சொல்லாதே மனதாய்ப்
பாரே. 692

## தொட்டிபாஷாணவைப்பு.

பாரப்பா தொட்டிபாஷாணந்தன்னைப் பண்பாக வைக்குமு
றை பகரக்கேளு. காரப்பா சீனமுடன் பூரங்கூட்டிக் கருவாக வெ
டியுப்புக் கூடச்சேர்த்து, சாரப்பா குகமொடு ரசஞ்சேர்த்து தய
ளாக அந்திடைக்குக் காந்தங்கூட்டி, வீரப்பா தாளடங்க வெண்கரு
ம்பாலாட்டி மேன்மையுட னிருப்பகலில் வைத்துமூடே. 693

மூடப்பா சட்டியிற்கு ளிருப்பகலை வைத்து மூர்க்கமுட னுப்பி
ட்டு மேலுமூடி, வீடப்பா பிலப்பதற்கு அடுப்பிலேற்றி விசையாக
முச்சாமமெரித்துவாங்கி, பாடப்பா ஒன்றுயிலே யாறவிட்டு பக்கு
வமாக யுடைத்தெடுக்க வமந்தாகேளு, தேடப்பா தொட்டிபாஷா
ணமென்பார் செகத்தோர்க்கு இந்தமுறை தெரியாதன்றே. 694

தெரியாது தொட்டியுட முறையைச்சேரு சிவசிவா தாதமது
திறமாய்க்கட்டும், பரியான தங்கத்தால் குருவதாச்ச பழுப்பாகும்
வெள்ளிசெம்பில் பதமாய்ப்பாரு; குறியான குறியறிந்து குருவைக்
காத்து குணமான பூரணத்தைக் குறிப்பாய்க்கொண்டு, அறிதான
இந்நூலைப் போற்றுவோர்க்கு ஆச்சரியம் வெகுவித்தை யறிவார்
பாரே. 695

பாரப்பா பங்கயத்தையறிவார்பாரு பதுமமலர் பூரணத்தைப்
பதமாய்க்கொள்ளு, நேரப்பா செயலறிந்து தேறத்தேறி தேகவச்
சிர காயமதா யிருக்கவேணும், ஆரப்பா அறிவார்கள் கற்பக்கூ

அரகரா காயாதி கற்பமென்று, கோப்பா கிலையறிந்து கொள்ளமா
ட்டார் வினைவறிந்து மனதறிந்து கிரணம்பாரே. 696

பாரென்றுஞ் சலமென்று மறுத்தாரென்றும் பார்த்தினேயோகா
க்கிறதோர் வாயுவென்றும், காலென்று மாகாச சென்னியென்றுங்
கருத்தாகத் தானறிந்து கருவைக்கண்டு, கேளென்று ஞானறிந்து
அஞ்சுமொன்றாய் வினைவாகப்பூசிக்க மைந்தாகேளு, ஆமென்று வுனை
க்குவிகர் சொல்லவரையா அரகரா அடிமுடியை மறந்திடாதே.

## சிங்கிமுறை.

மறவாமல் சிங்கியுட முறைக்கேளு மகத்தான வெடியுப்பு சீனா
ங்கூட்டி, உறவான காரமது மூன்றுமொன்றாய் உத்தமனே யிதுக்
குவிகார் நாகங்கூட்டி, திறமான வடிமுடியுங் கூடச்சேர்த்துச் செம்
மையுள அருசதுவுங் கானுங்கூட்டி, அறமான பூக்குகையில் வைத் 698
து ஊத அப்பனே யுருகிய குழம்பாம்பாரே.

குழம்பான பதங்கண்டு பதமுஞ்சேர்த்துக் குறிப்பாகக் குகை
யெடுத்து மைந்தாகேளும், தளமான தனக்கனிலே தளம்போல்நீறி
தன்மையுடனே திலவார்க்க இறுகும்போதில், நலமாக வுடைத்தெடு
ப்பாய் துண்டுதுண்டாய் நன்மையுள மிருதாரு சிங்கியாச்சு, வள
மான சிங்கிதனை யாரறியப்போறார் மகத்தான வேதைக்கு சிங்கி 699
யாச்சே.

சிங்கியென்ற சிங்கியுட முறையைக்கேளு சிவசிவா செம்புவெ
ள்ளி பொன்தானுமொன்றும், அங்கமதாய்க் குகைதனிலே யுருகும்
போது ஆதியந்த வெறசிங்கி பதிலேபோடு, பங்கமில்லாச் சிங்க
மது ஆட்டைக்கண்ட பரிசாமமுங்குறையுந்தான் கவ்வுமப்பா, சங்
கையுடன் குகைதனிலே காலுமொன்றாய்த் தன்மையுட னுருகியது 700
ஒன்றும்பாரே.

ஒன்றாகி உருகிநின்ற களங்குதன்னை உடைத்தப்பார் மாப்
போலே புதிருமப்பா, நன்றாக அப்பொடியைப் பதனம்பண்ணு
காட்டுவாய் செம்புதனில் நூற்றுக்கொன்று, குன்றாத வயதெனவே
சொல்லப்போறேன் குருவான அங்கமடா மயங்காதையா, சென்
றுட அம்பலத்தின் வருணைக்காட்டுஞ் சிவசிவா சிங்கிமுறை நன்றாம் 701
பாரே.

## சிங்கிமெழுகு.

பாரப்பா கட்டுமுறை சிங்கிவாங்கிப் பண்பாகக் கல்வத்தில்
பொடித்துக்கொண்டு, கேளப்பா ஐங்கோலத் தயிலத்தாலே தினா
லாகத் தானரைக்கும் போதில்சீரான், வாரப்பா குதமொடு நாகவி
ங்கம் வரிசையுள்ள காந்தமுட னயமுங்கூட்டி, சாரப்பா அரைத்தெ
டுப்பாய் காலுசாமம் சமர்த்தாக அரைத்தெடுக்க மெழுகுமாச்சே.

ஆச்சப்பா மெழுகிலொரு காணிதூக்கி அப்பனே வெள்ளி யொரு காணிநூறில், பாச்சப்பா இம்மெழுகை யென்னசொல்வேன் பகரிதாய் துலக்குகின்ற தங்கத்தாய்த்தானே, வீச்சப்பா வெகுச்ச சொல்லப்போமோ விண்ணிலாக் காயமதைநிறுத்தவேண்டி, காச் சப்பா மூலமென்ற கனலேறுமுங் கனகமென்ன தேகம்வச்சிரகாய மாமே. 703

## காயாதிகற்பம்-வல்லாரை.

காயமென்ற காயாதி கற்பந்தன்னைக் கருணைபெறச் சொல்லு கிறேன் மைந்தாகேளு, நேயமுடன் வல்லாரை யாறுமாதம் தின்த் தகொருஆரையடா ஆராந்திங்கள், தாயகமாய்க் கொண்டுவந் துலர்த்திமைந்தா சமரசமாய்த் தூளாக்கிக் கல்வத்திட்டு, மாயமென்ற தூள்தனிலே கழிஞ்சிகொள்ள மாயாது காயமது வனுவாய்ப்போச்சே. 704

## கடுக்காய்கற்பம்.

போச்சென்று விடாமலே தினமுங்கொண்டால் போருமடா நரைதிரைகள் சாவேயில்லை, ஆச்சென்று கடுக்காய்தான் வருஷமொன்று அப்பனே அதின்முறையைச் சொல்லக்கேளு, வாச்சென்று கடுக்காயைத் தகர்த்துக்கொண்டு வளமாக அமுரியிலே யூறப்போட்டு, காச்சென்று மறுநாள்தான் காயப்போட்டு கனக்காகப் பத்துமுறை சுத்திசெய்யே. 705

சுத்திசெய்த கடுக்காய்தான் செங்கடுக்காயாச்சு சுகமான கடுக்காய்தன் முறையைக்கேளு, பத்தியுட னிடித்துவடி கட்டிமைந்தா பாங்கான கரகமதில் பதனஞ் செய்து, புத்தியுடன் பூரணத்தைப் பணிந்துபோற்றிப் புனிதமுடன் ரேசகபூரகமும்பண்ணி, வெற்றி பெறக் கும்பகத்தினின்றுகொண்டு வேதாந்தக் கற்பமதை விரும்பிக்கொள்ளே. 706

## பத்தியம்.

கொள்ளடா காலையிலே வல்லாரை கொள்ளு கொண்டபின்பு மதியமதி லமுதுகொள்ளு, அள்ளடா கடுக்காயை மாலைதன்னில் தூணில்வெரு கடியளவாய்த் துணிந்துகொள்ளு, நள்ளடா மதியமதி லமுதுகொள்ளு நாமொன்று சொல்லுகிறேனயந்துகேளு, புல்லுடனே கல்முகங்கள் சுத்திபண்ணிப் பாலகனே விபூதியுந் தளமாய்ப்பூசே. 707

பூசியே ரெண்டெழுத்தை ஒன்றாய்க்கூட்டிப் பூரணமாம் செய்தபின்பு அசனங்கொள்ளு, நேசமுட னமுதுகொள்ளு சிறுபயறு கொள்ளு நேர்மையுள்ள சர்க்கரையும் பழமுங்கொள்ளு, வாசமுள்ள பதார்த்தமெலா மகிழ்ந்துகொள்ளு மகத்தான கடுக்காய்தான்

வறுவாய்ப்பாரு, பாசமுடனுமுறைத்த படியேயின்றால் பலிக்கும 708
டா காயசித்தி யோகந்தானே.

## லிங்கக்கட்டு.

யோகமுள்ள புத்தியினைசொல்லக்கேளு உண்மையுள்ள லிங்
கமுறைபுரைக்கக்கேளு, நாகமென்ற கருநாகம் வங்கமொன்று லெ
மானை குதமொன்று குருத்தானொன்று, பாகமென்ற சீனமொன்று
ஆதியர்தம் பக்குவமே லாங்கூட்டிக் கல்வத்திட்டு, ஆகமென்ற செ
யநீரால் பொடித்தாகக்கொண்டு அப்பனேகுப்பியிட்டு எரித்திடாயே.

எரித்திடவே லிங்கமின்றநாறமேறி ஏகமென்றகம்பியதா யிறு
கிநிற்கும், குறித்திடவே குளிர்ந்தபின்பு உடைத்துப்பாரு கூர்மை
யுள்ள குப்பிவைப்பின் சம்பிராகும், தரித்திடவேபோய்விடுமே லிங்
கங்கண்டால் தன்மையுள்ள லிங்கவுடைசாகமாகும், வருந்திமிகப்பே
ர்த்திடுவாய் லிங்கந்தன்னை மகத்தான லிங்கமதின் வரிசைகேளே.

கேளப்பா லிங்கமதைத் தங்கத்தூட்டிக் கெணிதமுடன் தா
னெடுத்து வைத்துக்கொண்டு, கேளப்பா கொட்டுதல்போல் வெள்
ளிநூற்றில் கெலிட்டாதே லிங்கதங்க மொன்றுதாக்கி, கோளப்பா
அத்தங்க மென்னசொன்னேன் குறைபற்ற தங்கமடாகூர்ந்துபாரு,
வேளப்பா எரித்தசிவ னெனக்குச்சொன்னார் வேதாந்தப் பன்னிர 711
ண்டு நூற்றில்தானே.

தானென்ற பனிரெண்டு நூற்றையைந்தா தாணிதனில்விள்ளா
தேநாவாடாதே, கோனென்றகுருபாத மடுத்துக்காருகுருவானபெ
ரியோரைவணங்கிமைந்தா, தேனென்ற அமுதமதுகொண்டால்மை
ந்தா தேகவச்சிர காயமடா திறஞ்சொன்னேனுன், வீனென்ற வீணா
ருடன் வீண்பேசாதே விண்ணொளிக்குள் கண்ணொளியை மேவிப் 712
பாரே.

பாரப்பா மதியிருந்த திசையைப்பாரு பக்குவமாய்த் தானறி
ந்த பருவந்தன்னில், நேரப்பா கதிரிருந்த திசையைப்பாரு நின்னி
டத்தில் மாறினதை நினைவாய்க்கண்டு, தேரப்பா நின்மனதை அறி
வால்தேறு தேர்ந்ததினுல் காயசித்திதிறமதாகும், ஆரப்பா அறிவா
ர்கள் சித்திசிவந்தன்னை அறிவான பெரியோர்களறிவார்பாரே.

## நாகமுறை.

பாரப்பா நாகமென்ற முறையைக்கேளு பக்குவமாய்ச் சொல்
லுகிறேன் மைந்தாமைந்தா, தேரப்பா தேகமென்ற வெண்ணுகத்
தான் சேர்ந்துநின்ற கருநாக மூசிருமாச்சு, வேரப்பா இருவகையு
மொன்றேயாகும் வெடியுப்பு நாலிலொன்று சூதம்ரெண்டும், கார
ப்பா கருவுப்பு நாகப்பூறுக் கல்லுப்புக் குண்டுமணிப் பருப்புங் 714
கூட்டே.

கட்டியே யிடைசமனாய்க் கல்வத்திட்டுக் குருவானகருவாலே
ஆட்டிக்கொண்டு, மாட்டியே குகைபிடித்துக் குகைக்குள்வைத்து
மைந்தனே துருசிட்டு வுலையில்வைத்து, நாட்டியே யுலையில்வைத்து
ஆதும்போது நன்மையுட னுருகிபல்லோ தெளியும்பாரு, வாட்டி-
யே பதங்கண்டு தெளிந்துதானால் வயிரம்போல் கண்விழுந்த நாக
மாச்சே. 715

நாகமென்ற நாகமதை யார்தான்காண்பார் நல்லோர்களறிவா
ர்கள் மற்றோர்காணார், தேகமென்ற தேகமதி லுயிர்தானின்ற திற
மான வுடலாவி காணார்காணார், பாகமென்ற வுடலாவி தனக்குமை
ந்தா பண்பான பொருளதுவுங்காணமாட்டார், ஆகமென்ற பொரு
ளதனைக் கண்டாரானால் அப்பவல்லோ வாதசித்தி நாகமாச்சே.

ஆச்சப்பா நாகமதி லஞ்சுவுண்டு அஞ்சான நாகமதில் ரெண்
டைக்கேளு, பேச்சப்பா வொன்றுமில்லை ராகுகேது பிசகாமல் ரெ
ண்டுமல்லோ ஒன்றையொன்று, மூச்சப்பா பிடித்தல்லோ கொன்று
போடும் மூலையான சுழிமுனையி லுயிருமாச்சு, காச்சப்பா குகைத
னிலே நாகமிட்டுக் கருவான சத்துருயித் தருவைமாட்டே. 717

மாட்டினதால் நாகமது கட்டிப்போச்சு மகத்தான குருவா
ச்சு மைந்தாகேளு, தாட்டிகமாய்க் கட்டினதைத் தானெடுத்து தன்
மையுளமேருவிலே நூற்றுக்கொன்று, நாட்டினதால் சேதியென்ன
சொல்லப்போறேன் நாகரத்ன மணியதுவு மெவ்வாறையா; தேட்
டினதால் நாகமதைத் தேடவேணுஞ் சிவசிவா வாசனையில் திறந்
தான்பாரே. 718

பாரப்பா வுலகத்தில் வாதிசொல்லும் பார்த்தேனான் காதா
ரக் கேட்டேனென்றும், வீரப்பா தானடைந்து சொல்லுஞ்சேதி
விள்ளுகிறேன் புலத்தியனே மனதாய்க்கேளு, சாரப்பாபச்சிலையால்
தங்கமாச்சு சாரமென்ற வுமிநீரால் தங்கமச்சு, காரப்பா கூகணிக்
காத்தாற்பஸ்பம்பண்ணிக் கண்மூடி முழிக்குமுன்னே தங்கமாச்சே.

தங்கமென்ற தங்கமது குருத்தான்பண்ணி சனுதியிலே பத்த
ரைதான் மாற்றைக்கண்டேன், அங்கமுடனிமிஷத்தில் வேதைபோ
ட்டால் அரகார மண்ணதுவும் பொன்னாய்ப்போச்சு, சங்கையுடன்
கண்டேனென்று சொல்வான்மட்டை தங்கமென்றஅங்கமதை யறி
யாப்பாவி, பங்கமென்ற வாயகந்தை பேசும்பாவி பார்தனிலே மெ
த்தவுண்டு கண்டுதேறே. 720

## பெரியோர்மகிமை.

கண்டுதேர் மனமுகந்து பேசவேண்டாங் கடக்கநின்று அகற்
றிவிட்டு கருவைக்கேளு, பண்டுடைய பரமவெளி கண்டபேர்கள்
பதறாமல் வளமையொத்திருப்பாரையா, தொண்டரெனத் தொண்

ஞ்செய்து, நேட்டமுடன் விட்டங்கே யிருந்துகொண்டு சிவசிவ பூரணத்தை நோக்குநோக்கே. 727

நோக்குவது பூரணத்தைப் பணிந்துகொண்டு நன்மையுள்ள முப்பூவை முடித்துக்கொண்டு, ஆக்குவது அமுதரச வர்க்கத்தோடே அப்பனே அமுதுகொண்டு கற்பங்கொண்டால், நாக்குநுனி அமுதரச மென்னசொல்வேன் நாவடங்கப் பூசைபண்ணி நாட்டம் பார்த்து, வாக்குமன தொன்றாக முப்பூச்செய்ய வழிமுறை தனை வழுத்தும் வழியைக்கேளே. 728

## முப்பூமுடிக்கும்வகை.

கேளப்பா அயமான வருக்குச்சட்டி கெணிதமுள்ள அயக்காந்தச் சட்டியொன்று, வேளப்பா காந்தமென்ற சட்டியொன்று விறடங்கும் நாகமதாற் சட்டியொன்று, தேளப்பாகருநாகச் சட்டியொன்று தெவிட்டாத வெண்ணாகச் சட்டியொன்று, வாளப்பா அயச்செம்பால் சட்டியொன்று, மார்க்கமுள்ள வெள்ளிதன்னாற் சட்டியொன்றே 729

ஒன்றான தங்கத்தால் சட்டியொன்று உத்தமனே பத்திரமும் ஒன்பதாச்சு, அன்றான நவக்கிரகபானபத்ரம் அப்பனேவழிமுறையா யடக்கிக்கொண்டு, நன்றாக அமுதரச வர்க்கங்கொள்ளு நன்மையுடன் கற்பமது அப்படியேகொள்ளு, குன்றாதமுப்பூவின் செய்கை மார்க்கம் கூறுகிறேன் வழிமுறையாய்க் கூர்ந்துகேளே. 730

## ஆதியுப்பு.

கேளப்பா ஆதியென்ற சவுக்காரத்தைக் கெணிதமுடன் கொண்டுவந்து விந்துநீரில், நாளப்பாதெசநாள்தான் தோய்த்துத்தோய்த்து நன்றாக ரவிமுகத்தில் காய்ந்ததானால், நீளப்பா சாமதினுப்புசென்று கோரணைமுழுவது கல்லுப்போச்சு, ஆளப்பா ஆதியென்ற வுப்புமாச்சு அப்பனே நாதவிந்து வுப்புக்கேளே. 731

## நாதவிந்துப்பு.

உப்பான சத்திசிவ மிரண்டிங்கூட்டி உடன்சேரு பூரமுடன் சேர்த்துக்கூட்டி, செப்பான அயம்வருக்குச் சட்டிதன்னில சேர்க்கையுடனுலினமுன் கரைத்துவைத்தால், அப்பான தெளிவிறுத்து பாத்திரமெட்டில் அரையளவு விட்டுரவி முகத்தில்வைத்தால், கைப்பான வுப்பதுவு மெட்டாநாளில் கடுங்கார வுப்பதுவாய் விளையுந்தானே.

விளைந்தஒரு உப்பதுக்கு சமன்சேரு விசையான சத்திசிவ உப்பதாச்சு, விளைந்தசிவ சத்தியுப்பின் மார்க்கஞ்சேரு மகத்தான சித்திநடி சத்துகூட்டி, உளைந்தவரு வுப்புடனே சித்துங்கூட்டி

உடன்சேர்த்து அயக்காந்தச் சட்டிதன்னில், குழைத்து நன்றாய்க் கரைத்திறுத்து தெளிவைமைந்தா கூர்மையுடன் பாத்திரத்திற்குணமாய்வாரே. 733

வார்த்துநன்றாய் ரவிமுகத்தில் காயக்காய வளமையுள்ள வுப்பாகும் பத்தாநாளில், கார்த்துமிக வுப்பெடுத்துவைத்துக்கொண்டு கலங்காமல் கீழறையில் பதனம்பண்ணி, சேர்த்துமிக மூப்பூவுமொன்றாய்க்கூட்டிச் செயமான அயமுழுக்குச் சட்டிதன்னில், தாற்றி நன்றாய் செயநீரில் கரைத்துமைந்தா தயவாக ரவிமுகத்தில் காயப்போடே. 734

போட்டவுட னுப்பாகுமைந்தாகேளு புகழான வயக்காந்தச்சட்டிதன்னில், கொட்டமுடன் போட்டுநன்றாய்செயநீர்வார்த்து திரளவே கரைத்துரவி முகத்திற்போட்டு, நாட்டமுட னவநாள்தா னுப்பேயாகும் நன்மையுட வுப்பெடுத்துச் சொல்லக்கேளு, வாட்டமிலாக் காந்தமதின் சட்டிதன்னில் வார்த்திடுவாய் செயநீரை மைந்தாபாரே. 735

பாரான வுப்பெடுத்துக் கரைத்துமைந்தா பதிவாக ரவிமுகத்தில் வைத்துப்போற்று, நேராக வெட்டாநாளுப்பேயாகும் நிசமாக வுப்பெடுத்துச் சொல்லக்கேளு, வீரான நாகமதின் சட்டிதன்னில் விசையாக வுப்பிட்டு செயநீர்வார்த்து, கூராக ரவிமுகத்தில் வைத்தாயானால் குறையாக வுப்பாகுங் குருவாம்பாரே. 736

பாரப்பா கருநாகச் சட்டிதன்னில் பக்குவமா யுப்பிட்டு செயநீர்வார்த்து, சாரப்பா கரைத்திடுவாய் நன்றாய்மைந்தா தன்மையுடன் ரவிமுகத்தில் வைத்துப்பார்க்க, நேரப்பா எழுநாளுப்பேயாகும் தெவிட்டாத வுப்புதனை யெடுத்துமைந்தா, வேறப்பா வெண்றுகச்சட்டிக்குள்ளே வேதையென்ற வுப்பெடுத்துச்செயநீர்பாய்ச்சே.

பாய்ச்சிநன்றாய்க் கரைத்துமிகரவியில்வைத்தால் பரமான வுப்பாகு மாறுநாளில், காய்ச்சியதோ ருப்பெடுத்து மைந்தா மைந்தா கருவின்னஞ் சொல்லுகிறேன் கருதிக்கேளு, தாட்சியிலா தாம்பிரப்பாத்திரந்தன்னில் தயவாகவுப்பிட்டு செயநீர்வார்த்து, வாச்சுதென்று கரைத்திடுவாய் நன்றாய்மைந்தா மகத்தானரவிமுகத்தில் வைத்துப்பாரே. 738

பார்க்கவே அஞ்சாநாள் காரமேறிப் பகமையென்ற வுப்பாகு மைந்தாமைந்தா, ஏர்க்கவே யுப்பெடுத்து மைந்தாகேளு ஏகாந்த வெள்ளியென்றசட்டிதன்னில், மார்க்கமுடவுப்பிட்டுசெயநீர்வார்த்துமணமடங்க ரவிமுகத்தில்வைத்துமைந்தா, சேர்க்கையுடனைநாளுப்பேயாகுஞ் சிவசிவா இதின்பெருமை செப்பக்கேளே. 739

கேளப்பா சத்திசிவ ரூப்பேயாச்சு கேள்மகனே யுப்பெடுத்துச் சொல்லக்கேளு, வாளப்பா தங்கமென்ற சட்டிக்குள்ளே வரிசையுட னுப்பிட்டு செயநீர்குத்தி, ஆளப்பா விரவிநன்றாய் ரவியில் காய்ந்தால் அப்பனே மறுபடியுஞ் செயநீர்விட்டு, நாளப்பா மூன்றுநாள் காய்ந்துதானால் நாதமென்றவுப்பாகும் நாதமாமே. 740

நாதாந்தவழலை.

நாதமென்றவுப்பதுக்கு நாமங்கேளு நாதாந்த வழலைசவுக்காரமென்பார், போதமென்ற பூரணத்தி னுப்பென்பார் புகழ்காரசாரமென்ற லவணமென்பார், நீதமென்ற குருவான முப்பூவென்பார் கிலைத்ததொரு பூரமென்பா ரடியதென்பார், பாதமென்ற அடியென்பார் முடியதென்பார் பாரபரத்தின் னருள்காட்டும் பசுமைதானே. 741

தானென்ற பூரணத்தி னுப்பால்மைந்தாசதாகோடி சித்துமிக ஆடலாகும், வீணென்றமானிடர்க ளுப்பைக்காணார் விண்ணென்றுமாகாசப புரவியென்றும், தேனென்றமதுவென்றுங் காணமற்றுன் திகைத்தல்லோ நாதவுப்பை யறியவென்று, நானென்ற ஆணவத்தால் பெண்ணைக்கூடி நயந்துசுசங் காட்டியவ ளிடத்தில்தானே.

தானப்பா மாதவிடாய் தன்னைவாங்கித் தவறுமதுப்பெடுப்பேனென்பார்மாண்பர், வீணப்பா கல்லுப்பைநாதமென்பார் வீணனசவுட்டுப்பை நாதமென்பார், காணப்பா வெடியுப்பை நாதமென்பார் கரைக்கின்ற நீருப்பை நாதமென்பார், தோணப்பா வெகுவாகப் பார்ப்பார் மாண்பர் சுந்தரம்போல் நாதமுறையறியார்தானே.

தானென்ற நாதமுறை யறியவென்றால் தப்பாது வெகுபாடுபாடுமெத்த, கோனென்ற சற்குருவால் காட்டவேணுங் குறிப்பாகக் கைமுறையா யறியவேணும், தேனென்ற இடம்வேணும் பொருள்தான்வேணுஞ் சிந்தைமனந்தொன்றுனசிஷனவேணும், மானென்றமன துறுதி பழக்கத்தாலே மகத்தான நாதமதை யறியலாமே.

ஆமப்பா நாதவிந்து செயல்தான்காணார் ஆகாகுருவிடத்திற் காணலாகும், தாமப்பா விந்திலே நாதமென்றுந் தயவான நாதமிலைப் போதமென்றும், நாமப்பா வென்றசொல் நாதம்நாதம் நாட்டிலே யிந்நூலில் நாதவாழ்வு, ஓமப்பா சொல்வதுபோ லொருநூல்சொல்லா தொடுக்கமென்ற இந்நூல்தான் குருநூலாமே.

நூலான இந்நூற்பன்னிரண்டுநூறு நுணுக்கமுடனிந்தநூலைப் பதனம்பண்ணி, காலான பன்னிரண்டு கலையின்மார்க்கங் கடக்காமலிந்நூலாற் கட்டலாகும், ஆளான ஆண்பிள்ளைகள் நூலைக்காப்பார் அமர்ந்தநிலைசித்தனென்றால் பன்னிரண்டுங்காப்பார், நாளான தினம்பார்த்து வாசிபார்த்து நாதவிந்து நிலைபார்த்து நாட்டாப்பாரே.

நாட்டமுட னுதவெப்பை நாதநீரால் னொருகந்தாளுட்டி மில்லே செய்து தேட்டமுடன் ஈளிமூகத்தில் காயப்போட்டுச் செம்மையா யோட்டிடுமவைத் தேசமூடி, காட்டியாய் மண்சீலை வலுவாய்ச்செய்து தாமவெட்டி எருப்பாப்பிப் புடத்தைப்போட்டால், வாட்டமிலா நாதவெப்புச்சுண்ணமாகு மகத்தான முப்பூவின் மார்க்கங்கேளே.

## முப்பூச்செயநீர்.

கேளப்பா முப்பூவில் சாரஞ்சேர்த்துக் கின்னமென்ற மிங்கானில் பணியில்வைத்தால், நீளப்பா சலமிளமை என்னசொல்வேன் நீரான சலந்தனிலே மைமத்தாக் கேளு, வாளப்பா வீரமுடன் பூரஞ்சேர்த்து மகத்தான நீர்தனிலே தாவிப்பாரு, கூளப்பா போலவெமேலிவர்த்துகாணுங் கூர்மையுள்ள வெப்பதுவுங் கட்டிப்போச்சே. 748

கட்டிநின்ற சலமதிலே முறைமைக்கேளு கருவான துருசிமொடு லிங்கம் வீரம், திட்டமுள்ள கெந்தியிலே தாரம்பூரஞ் சிறப்பான கெவுரியுட பாஷாணங்கள், சட்டமுள்ள நவாச்சாரஞ் சீனக்காரஞ் சாந்தமுள்ள பொரிக்காரம் வெடியுப்போடு, அட்டியில்லாச் சுருக்கான சாக்கெல்லாந்தான் அப்பனே சுருக்கிடவேகட்டிப்போச்சே.

போச்சென்று விநோதே செயநீர்தன்னில் பொல்லாத நாகமுடன் கருநாகந்தான், நீச்சென்ற வெண்ணாக மிடிவகையெல்லாம் நேராகத் தானுருக்கிச் சாய்த்தாயானால், வீச்சென்ற வேகமெலா மடக்கிக்கட்டி விறடங்கக் கட்டுமடா மைந்தாமைந்தா, பாச்சென்ற காந்தமதைத் தோய்த்துத்தோய்த்துப் பதினாகப் புடம்போட சாஞ்சாமே. 750

சாஞ்சா மப்பிரேகந் தோய்த்துவாட்டி என்னசொல்வே னெனிமடங்கிக் கட்டுக்கட்டும், காரஞ்சாரஞ்சாரஞ்சா மெல்லாஞ்சாகும் கருவான வுபரசங்கள் சத்தேயாகு, வீரஞ்சாம் பூரஞ்சா மெல்லாஞ்சாகும் விறடங்காச் சாக்கெல்லாம் விரைந்துபோகும், தாரஞ்சாஞ் சகலசாரக் கெல்லாஞ்சாகுந் தன்மையுள்ள கட்டுவகை செயநீராச்சே. 751

## மெழுகுவகை.

ஆச்சப்பா கட்டுவகை செயநீர்சொல்லி அதிலடங்குஞ் சரக்குவகை யெல்லாஞ்சொல்லி, காச்சப்பா மெழுகுவகை செயநீர்கேளு கருவான கட்டுவகை செயநீர்தன்னில், பாச்சப்பா கட்டிநின்ற சாரங்காரம் பாங்கான வீரமுடன் பூரந்தானும், தேச்சப்பாபொடித்து நன்றாய்த் தாவிப்பாரு இலகிலவா மஞ்சத்திறஞ் செயநீராச்சே. 752

நீரான செயநீரில் முன்னேசொன்ன நிசமான கட்டுவகை சாக்கையெல்லாம், ஆறுணநீர்தனிலே அழுக்கிவைத்து அப்பனே வின

க்கொளியில் வாட்டிருக்கால், கூரான சாரமெல்லாஞ் சரக்கிற்செ
ன்று கொளுங்கொள்ளை வெதும்பியது மெழுகுமாமே, வாரான
மஞ்சள்நிற மெழுகுதன்னை வகைவகையாய் பதனமாய் வைத்துப் 753
போற்றே.

போற்றிய மெழுகுவகை செயநீர் சொல்லிப் புதுமையுள்ள
கைப்பாகப் பூணச்சொல்லி, தேற்றிய செய்வகையுந் தேறச்சொ
ல்லி தேகவச்சிர காயமாயிருப்பதற்கு வாழ்த்தியே ஆதியந்தம் வழி
யுஞ் சொன்னேன் வரிசையுள்ள பூரணமும் வகையுஞ்சொன்னேன்
ஆத்தியே அறிவுகுரு நீயாய்நின்றால் அப்பவல்லோ தசநாத மறிய 754
லாமே.

## செந்தூரவகை.

ஆமப்பா கட்டுவகை நீருஞ்சொல்லி அதின்பிறகுமெழுகுவகை
செயநீர்சொன்னேன், நாமப்பா செந்தூரஞ் செயநீர் சொல்வேன்
நன்மையுள்ள புலத்தியனே நன்றாய்க்கேளு, தாமப்பாமெழுகுவகை
செயநீரோடே தவறாமல் கட்டுவகை செயநீர்கூட்டி, வாமப்பா பிங்
காணில் விட்டுநல்ல மதியான ரவிதனிலே வைத்துப்பாரே. 755

பார்க்கவே ரெண்டுவகை நீருங்கூட்ட பசுமையுள்ள செந்நீர
ய்ச் சிவந்துபோகும், ஏற்கவே யிந்நீரில் வகையைக்கேளு இன்பமு
டன் கூட்டிவைத்த சரக்கின்மேற்கா, காக்கவே யெச்சரக்குங் கல்வ
த்திட்டு கட்டிநின்ற ரசமதுவு மிடைதான்விட்டு, சேர்க்கையுடன்
கட்டிநின்ற கெந்திதன்னில் செம்மையுடனொளிவொன்றதனிற்சேரே.

சேர்த்துநன்றாய்ப் பொடித்துமே செந்நீர்விட்டுத் திறமாக அ
ரைத்துநன்றாய் வில்லைபண்ணி, போற்றியே ரவிதனில் காயப்
போடு புதுமையுடனோட்டில்வைத்து ஓட்டிமூடி, தேற்றியேமண்சீலை
வலுவாய்ச்செய்து செம்மையுடனிதானமாய்ப் புடத்தைப்போடு,
சாற்றுவாய் வயிரவற்கு வடமாலைசாற்றித் தன்மையுடன் பூசைப 757
ண்ணி யெடுத்துப்பாரே.

பாரப்பா செந்தூரங் கல்லொள்ளாது பதனமாய்சிமிழதனில்
வைத்துக்கொண்டு, சேரப்பா சரக்குகளை யிப்படியேசெய்தால் செ
ந்தூரம் பொய்யாது செம்மையாகும், ஆரப்பா அறிவார்செந்தூரப்
போக்கு ஆதியந்த மறிந்தவரே அறிவாரப்பா, காரப்பா தானிரு
க்கு மொடுக்கத்தன்னில் கருவான செந்தூரம் வைத்துப்போற்றே

போற்றப்பா பணவிடைதா னுட்கொண்டேதான் பூரணத்தை
ப்பற்றிமனை தறிவாசிதின்று, பார்த்தப்பா ரேசகபூரகமும்பண்ணிப்
பதிவான கும்பகத்தில் நின்றுகொண்டு, கார்த்தப்பா வகைவகை
யாய் செம்பிஇட்டு மனகமது என்னசொல்லிவன் மைந்தாமைந்தா

ஆர்த்தப்பா சிவயோகி தனைகருநல்ல அன்பான எளியோர்க்கு யீந்துபோடே. 759

போடப்பா சிவயோகி எளியோர்க்குத்தான் புத்திமனமொன்றாகத்தான்மைந்தா, நாடப்பா சிவபூசைவிதாரணரும்நன்மையிலா மாந்தருக்கு ஈந்தாயானால், கோடப்பா தெளிந்திடுங்காணப்பாசொன்னேன் கோடறிந்து தனமைது குணமாய்ச்செய்து, தேடப்பா சிவயோக வாழ்வுதன்னைத் தேடுவது பூரணத்திற் றேடுதேடே: 760

தேட்டமென்ன பூரணமே தெய்வந்தெய்வந் தெவிட்டாத பூரணத்தைக் கொண்டாயானால், வாட்டமென்ன தேகமப்பா வச்சிரகாயம் வடிவான பூரணத்தைமறந்தாயானால், ஆட்டமென்ற ஆட்டமெல்லா மடங்கிப்போகும் அதின்பிறகு என்னசெய்வா யையயா வையா, நாட்டமென்ற பூரணத்தைப் பூசைபண்ணி நன்மையுள்ள பற்பவகை நாட்டக்கேளே. 761

பஸ்பவகை.

கேளப்பா செந்நீருங் கட்டுவகைநீருங் கிண்ணமென்ற பிங்கானில் சரியாய்வைத்து, வாளப்பா ரவிதனிலே வைத்துப்பாரு மகத்தான நீரதுவும் வெண்ணீராகும், ஆளப்பா விந்துவென்ற சரக்கையாட்டி அதிலிடுவாய் வீரமென்ற ரசத்தைத்தானும், மாளப்பா அரைத்திடுவாய் வெந்நீர்விட்டு மனமடங்க அரைத்துநல்ல வட்டுப்பண்ணே. 762

பண்ணியதோர் வட்டதனை யோட்டில்வைத்துப் பதிவாகமேலோடு பதியமூடி, உண்ணியது போகாமல் மண்ணுஞ்செய்து ஒருமுழத்திற் குழிவெட்டிப் புடத்தைப்போடு தண்ணிமையாய் புடமாறி யெடுத்துப்பாரு தன்மையுட னீறியது தவளநிறமாகும், வண்ணியென நின்றதொரு நாதவுப்பால் மகத்தான சரக்கெல்லாம் பஸ்பமாச்சே. 763

ஆச்சப்பா பஸ்பமென்று மகிழ்ந்திடாமல் அரையான குகைதனிலே வைத்துப்போற்றி, பாச்சப்பா பணவிடைதா னகத்துள்ளேதான் பக்தியுடன் கொண்டதினால் பரமதேகம், காச்சப்பாமனக்கண்ணாற் கனலைத்தூண்டி கற்பூரதீபமதிற் கருத்தைவைத்து, மூச்சப்பா தானிருத்தி முழித்துப்பார்த்து மூக்காலும் ரேசகபூரகமும்பண்ணே. 764

பண்ணியதோர் பஸ்பத்தின் பலனைக்கேளு பக்குமாய் செம்பதிலே நூற்றுக்கொன்று, தன்னிமையாய்ப் பணிந்து பஸ்பம் பணவிடைதானெடுத்து தாயானசெம்பதிலேயூட்டிப்பாரு, விண்ணிறைந்தகயிலாசங் கொள்ளையாச்சு வெள்ளையென்ற வெள்ளிவித்தை யதிக

யானால், புண்ணியமாம் சிவயோகி வெளியோர்க்குந்தான் புத்தியுடன் தானதர்மம் புகழ்ந்துசெய்யே. 765

செய்யப்பா மனதுகனி கூர்ந்தன்றாய் சிவயோகி தங்களுக்கு அன்னமீவாய், மெய்யப்பா அவரவர்கள் மனதின்படிசெய்தால் வெகுகோடி தவமகிமை மிகுந்துசேரும், கையப்பா வுதவுவது சிவத்தின்கூறு கருணையுடன் தவமதுமே செய்தாயானால், ஐயப்பா தவமதுதான் கைக்குள்ளாகுந் தன்மையுடனன்மையதா யிருந்துவாழே. 766

## நடுவணையமுது.

வாழ்வதற்கு இன்னமொரு வளமைகேளு மார்க்கமுடன் நடுவான அமுதங்கொண்டால், காலனுக்குஞ் சண்டாலுக்குங் காற்றைப்போக்குங் கருத்துயிசைத் தான்வளருங் கருணைசேரும், மேல்வனுக்கு மதிகமதாய்ப் பிலமுண்டாகும் மெய்பிணியா நோய்களெல்லாம் விலகிப்போகும், ஆள்வதற்குக் குருவுதவி யதிகமுண்டாம் அரசா நடுவான அமுதங்கொள்ளே. 767

## பூரணமகிமை.

கொள்ளப்பா ஆண்டொன்றில் சித்தியாகுங் குணமாக இன்னமொரு குறிகைக்கேளு, விள்ளப்பா சொல்வதற்கு நாவுண்டோ சொல்லிசையான சத்தியடிமூலம்வாசி, நாளப்பா தினம்பார்த்து அமுதந்தோடே நன்மையதா யுட்கொண்டு விட்டால் மைந்தா, கலப்பா பிலத்துநடா மூலவன்னியாலே லெங்காது வாசிதன்னுய்க் கட்டிப்போமே. 768

கட்டிப்போம் வாசியது கடக்காதப்பா காலனை மூலமதிற் கலந்துதூமே, குட்டிப்பார் தேகமது குழைந்தாறும் குருவான தேகமது கற்பூரம்வீசம், வெட்டிப்பார் தேகமது ஆசையாலைதவா வெகுகோடி பசைக்குமொரு மெய்யாய்நிற்கும், தட்டாத அவயிருத்து நட்டிப்போகுந் தயவான பூரணத்தின் தன்மைதானே. 769

தானென்றும் நானென்றும் வேறுண்டோசொல் தானவனுய் நின்றுநடா மூலவன்னி, கோவென்ற குருவான வன்னிதன்னைக் கூர்மையுடன் கண்டுமனை தொண்டாய் நின்று; தேனென்ற அமுதமது அருவியாயுந் தெவிட்டாத அமுதமது தெய்வத்தெய்வம், வீணென்று தெய்வமதை சொன்னானால் விண்டெறிக்கும் விண்தெறிக்கு மெய்சொன்னேனே. 770

சொன்னதொரு இத்தநூல் மைந்தாகேளு அருவமுள்ள ஆதிசக்தி யிருநூறுகும்; முன்னோர்கள் மொழிந்தவொரு நூட்டெல்லாம் மூலமான குருநூலா யிந்நூல்மைந்தா; கன்றான கண்மணி

போ லிந்நூல்தன்னைக் காட்டாதே மானிடர்க்குக் காட்டினக்கால்,
லின்றோர்கள் சாபமது சவாரீவார் விவேகமுள்ள புலத்தியனே 771
நூல்காட்டதே.

நூல்காட்ட வேனுமெனச்சித்தர்கூடி நூனுக்கமிலா நூனுக்க
மது செய்தாரானால், நான்காட்டி யவர்களுக்கு நன்மைகூறி நாட்
டமிலாப் பேர்களைமா ரணமேசெய்வாய், கால்கட்டுங் கேசரமா யிர
த்தைப்பாரு காவியமா மாயிரத்தைக் கருத்தாய்ப்பாரு, சேல்காட்
டுஞ் சமாதிகற்பந்திட்சைபாரு சிவசிவாஎன்னுடையஞானம்பாரே.

பாரப்பா அண்டபகி ரண்டமெல்லாம் பண்பாகப் பூரணத்தி
லொடுங்குமையா, ஆரப்பா அறிவார்கள் பூரணத்தி னேர்மை அர
கா தசநாத மார்தான்காண்பார், காரப்பா மூலமதிற் கருத்தை
வைத்து கமலமென்ற ஆயிரத்தெண் ணிதழைப்போற்றி, தோப்பா
தேர்ந்தாலி அமுதங்கொள்ளு சிவசிவா கயிலாசத் தேகமாமே.

அபக்குவர் தன்மை.

தேகமென்ற அகமறியார் சித்தர்கோடி சிவவேடன் காணுத
இருட்டுச்சித்தர், ஆகமென்ற நூல்முறையைப் பற்றிநின்று அலை
வார்கள் வாய்புகம்பி அருளைக்காணார், பாகமென்ற சுவையறியார்
பாதகர்கள்மெத்த பாலறியாப் பாலருக்கும் பாவிமார்கள், ஏகபா
வஸ்துவென்பான் யோகமென்பான் எட்டிரண்டு மறியாத குரு 774
டன்றானே.

தானென்ற தத்துவத்தை யறியாமூடர் தன்மையென்றசொல்
லறியார் கருகுழம்பர், நானென்ற மதமேதான் பேசிப்பேசி நல்
லோரைத் தான்பழிக்கும் நலமிலாதான், கோனென்ற சற்குருவை
யறியாதாறுங் கூசாமல் சாராய வெறியால் மைமந்தா, ஆணென்றும்
பெண்ணென்று மறியாமற்றான் அகப்பிடித்த மட்டிகளை யடுத்தி 775
டாதே.

அதித்தமென்ன முப்பூவின் பெயர்கேட்பான் அதின்பிறகுவே
தமுகம் என்னவென்பான், கடுத்தாமாய் சாக்குவகை பஸ்பங்கே
ட்பான் நலமானசெந்தூர முறைமையைக் கேட்பான், கடுத்தகொரு
மெழுகுவகை என்னவென்பான் கருவானசாக்குவைப்புமுறைதான்
கேட்பான், விடுத்தமிகச் சொல்லாட்டால் போப்போம் என்பான் 776
விதியுண்டா குல்வருமென் றெண்ணையாரே.

என்றுமல் எண்ணினாண்ணி மனதுகொந்து இடைந்தமிக்
கனைந்தொரு பாவிமார்கள், கண்றனைகண்பார்த்து கலைத்தாண்டி
கற்பூரியமதிற் சருத்தைவைத்து, பண்றனை ராசபூரசமும்பண்
ணிப் பதிவான கும்பகத்தில் பதியமாட்டார், என்றனை தன்பெரு
மை தனையெண்ணி நானென்றுமென்ற துறை தனைக்காணாரே.

காணாமல் கருத்தழிந்த மடையர்மெத்த கர்மவினைநீராக சமு
தைமாண்டார், வீணானவாய்மொழிகள் மெத்தப்பேசி வேதமென்ன
சித்தாந்த மென்னவென்பான், கோணான குருபதத்தைக் காணாமா
ந்தர் குவலயத்தில் மெத்தவுண்டு கண்டுதேறு தேனான மதியமுதம்
பானம்பண்ணு திறமான சிந்தையதாய் ஞானம்பாரே. 778

ஞானமென்ன புருவமைய மழுத்திப்பாரு நத்திவெளிப் பிர
காசஞ் சோதிசோதி, மோனமென்ன பிரணவமோரம்காரம் மூக்
காலுாரதமதில் விந்துவிந்து, பானமென்ன நாதவிந்து வொன்டுங்
கூடிப் பாஞ்சவிடம் பரமான பூரணமேயாகும், வானமென்ன அந்
தரத்தில் நாதவோசை மகத்தான ஓசையடா நாதமாமே. 779

## தாளக்கட்டு.

நாதமென்ன தாளகத்தின் கட்டுச்சொல்வேன் நலமான விந்து
வுடனாதஞ்சேர்த்து, பாதமென்ற அடிமுடியுங் கூடச்சேர்த்து பா
ங்கான வெடியுடனே காரஞ்சேர்த்து, சேதமென்ற பழச்சாற்றால்
கல்வத்தாட்டி நிசமான தாளகத்தைக் கங்கிபூட்டி, வாதமென்ற மதி
தியினால் சீலைசெய்து வனுவாக ரவிமுகத்தி லுலர்த்திடாயே. 780

உலர்ந்ததொரு கவசமதானன்றாய்க்காய்ந்தால் உத்தமனே எரு
வடக்கிப் புடத்தைப்போடு, அலர்ந்துமிகப்புடமாறி எடுத்துப்பாரு
அப்பனே தாளகந்தான் ரவிபோல்கட்டும், தளர்ந்துமிக வாடாதே
சொல்லக்கேளு தன்மையுட னதிர் விட்டுஆட்டி, மலர்ந்ததொரு
காரீயத் தகட்டிற்பூசி மைந்தனே யோட்டில்வைத்து சீலைசெய்யே.

செய்யப்பா எருவடுக்கிப் புடத்தைப்போடு செம்மையுள்ள
தகடதுவும் நீறிப்போகும், மெய்யப்பா சொல்லுகிறேன் பஸ்பந்த
ன்னை மேகமென்ற ரோகத்துக் கினுதானிய, வையப்பா மேகமெல்
லாம் பறந்துபோகும் பஸ்பமதின் செயலதனைப் பகரக்கேளு, ஐ
யப்பா ரசமதனைச் சுத்திசெய்து வாகானகல்வத்தி லாற்றிடாயே.

ஊற்றியதோர் ரசமதனிற் பத்துக்கொன்று உத்தமனே பஸ்ப
மது ஒன்றுபோடு, தேற்றியே வாய்நீரை விட்டுஆட்ட சிவசிவா ரச
மதுவும் வாலையாச்சு, போற்றியே வாலைரசம் பதனம்பண்ணிப் புல
த்தியனே கைமுறையைப் புகலக்கேளு, வாத்தியே பரித்தகட்டிக்
தடவிநன்றாய் வரிசையுடன் புடம்போட வளமைகேளே. 783

கேளப்பா வட்டமதா போடுதட்டிக் கெணிதமுடன் செங்க
லென்ற பொடிபரப்பி, தாளப்பா தகடுவைத்த பொடிபரப்பித் தன்
மையுடன் மேலோடு தயவாய்மூடி, சூளப்பா எருவடுக்கி அனலை
மூட்டி முக்காலுஞ் சுற்றிவந்து முன்னேநின்று, ஆளப்பா அந்தபா
கப் பொடித்துநின்று அனலாறியெடுத்துப்பார் குருவாய்ப்போமே.

குருவான பரித்தகட்டை எடுத்துப்பார்க்கில் குருபரமாம் விந்துவெனத் தோற்றமாகும், பருவமுட னுடைத்திடவே தெறிங்கிப்போகும் பரமான குருவப்பா பதனம்பண்ணு, திருவான செம்பதிலே நூற்றுக்கொன்று செம்மையுடன் கொடுத்திடவே நன்மையாகும், கருவான வெள்ளியிலே நூற்றுக்கொன்று கணக்காகக் கொடுத்திடவே வணக்கமாமே. 785

வணக்கமுடன் குருவிலொரு பணந்தான் தூக்கி மகத்தாலவெள்ளிசெம்பு கணக்காய்ச் சேர்த்து, இணக்கமுடன் கொடுத்திடவே மாற்றுப்பத்தாய் இருக்குமடா புலத்தியனே யிணங்கிப்பாரு, நனக்குமிது இடைந்தபோகு மென்றேயுந் தானிருக்கும் ஒடுக்கமதில் பதனம்பண்ணி, மனக்குமிது பொருளதனைச் சிவயோகிக்கு மனமகிழக் குருபூசை செய்குவாயே. 786

செய்வதுதான் மனதுருகமையாகவேணுஞ் சிவபூசைகுருபூசை செய்யவேணும், தெய்வமென்ற சிவயோகி தனக்குமைந்தா சிந்தை மனதொன்றாக நடக்கவேணும், சைவமென்ற நெறிதனிலே நிற்கவேணுஞ் சங்கற்ப விகற்பமெல்லாந் தள்ளவேணும், மெய்வதுவாய் மனமொத்து நடக்கவேணும் மேல்வரம்பு கீழ்வரம்பு மெய்யிற்காணே. 787

காணப்பா வுலகத்தோ டொத்துவாழ்ந்து கமலமென்ற ஆயிரத்தெண் மலருக்குள்ளே, தேனப்பா போலவுமே அமுதகிற்குஞ் சிவசிவா அமுதத்தைக் கொள்ளவென்றால், ஊணப்பா மூலமதில் மனதைவைத்து உறுதியுடன் ரேசகபூரகமும்பண்ணி, தானப்பாகும்பகத்தில் தனதாய்நின்று தன்பசிதாறுமட்டு மமுதங்கொள்ளே.

கொள்ளப்பா அமுதமதைக் கையில்வாங்கிக் குணமாக வசியவென்று குறிப்பாய்க்கொண்டு, மெள்ளப்பா பூரணத்தில் மனதைநாட்டி மேலாதாரத்திலந்தச் சுடரைப்போற்றி, செல்லப்பா போதகத்தில் நின்றுகொண்டு செகத்திலுள்ள மானிடர்தன் றேணையப்பார்த்து, விள்ளப்பா சிவயவசி யென்று சொன்னால் மெய்யிலுள்ள வினைகளெல்லாம் விலகிப்போமே. 789

## சத்துருவசியம்.

போமப்பா பூரணத்தில் மனதைவைத்துப் பொறுமையுடன் ரேசகத்தால் பூரகத்தைப்பார்த்து, காமப்பா கும்பகத்தில் நின்றுகொண்டு நமவயந வென்றுநீ சொன்னாயானால், தாமப்பா சத்துருவும் வசியமாகுஞ் சகலகலைக் ஞானமெலாந் தானேதோற்றுங் காமப்பா கலையிலே தம்பனத்தைத்தேறு கட்டாக நிஷ்டைமுறை கருத்தில்லையே. 790

வையப்பா வாசிதனை மூலத்தூட்டி மகத்தான மூலமதால் ரேசகத்தைப்பற்றி, செய்யப்பா பூரகத்தால் கும்பகத்தில் நின்று செபித்திடுவாய் வசியசிவ னென்றுமாறி, பையப்பா பகைவர்மேலாசை கொண்டால் பதறுதவிர்ந்துவது செயமாய்நிற்கும், மெய்யப்பா இம்மொழியை யுலகத்தோர்க்கு விள்ளாதே குற்றம்வருஞ் செயமாய் நில்லே (இது விந்துஸ்தம்பனம்.) 791

## சத்துருமாரணம்.

செயமாகச் சத்துருமா ரணத்தைக்கேளு செப்புகிறேன் யவசியவ வென்றுமாறு, பயமாகிச் சத்துருவு மயங்கிப்போவான் பஞ்சதனிலக்கினிபோற் பற்றும்பற்றும், நயமாகமாறிநிற்ப தாரையென்றால் நல்லோரைத் தூஷணிப்போர் நன்மையில்லார், மயமான சிவசெந்தை அழித்தோர்தன்னை மாரணிப்பாய் புலத்தியனே மனதிற்காணே. 792

காணப்பா பூரணத்தைக் கண்டுபூசிக் கைமுறையாய்க் கொண்டிநிற் காணுஞ்சித்து, வீணப்பா வென்றுசொல்லி நினைத்தாயபானல் வேதாந்தஞ் சித்தாந்த மிரண்டுங்கெட்டார், தானப்பா தாமவனுய்த்தனதாயந்த தன்மையுள பூரணத்தி னன்மையாலே, தூணப்பா துரும்பாகுந் துரும்புதூணாஞ் சொல்லாத இந்நூல்தான் குருநூலாமே. 793

குருநூலா மாயிரத்தி யிருநூறுக்குத்தான் குறிப்பாக ஆதியந்தம் நன்றாய்ப்பார்த்தால், தருநூலாஞ் சகலசித்துமிந்திரசாலந் தன்மையுள்ள மந்திரமுஞ் சித்துதானும், வருநூலாம் வாதமது அனந்தஞ் சொல்லும் வாருதிபோல் செயநீரும் வதுவாய்ச்சொல்லும், கருநூலாம் பன்னிரண்டுநூறுங்காத்த கட்டாகவிட்டேனே நாலைச்சேரே.

## பூரணபூசை.

நாலான பூரணத்தில் நின்றாயானால் நழுக்காது எட்டுமிரண்டு மொன்றாய்ப்போகும், காலான வாசியது கட்டுங்கட்டுங் கட்டாகுந் தேகமது வச்சிரகாயம், மேலான தேகமப்பா பிர்மமாச்சு மெய்யில் நின்றவாசியது பரமாய்ப்போச்சு, தானான இதழ்ப்பூவு மறியலாகுந் தயங்காமற் பூரணத்தைப் பூசைபண்ணே. 795

பூசையென்ன நேசமதா யிருந்துகொண்டு பூரணமே பரபரமாய் புத்தியாலே, ஆசையுடன் ரவிமதியை யன்பாய்க்கண்டு அக்கினியின் கோத்திரமா யருளைப்போற்றி, நேசமுடன் ரவிமதியை மாறிமாறி நிலைத்தகொரு அக்கினியில் நிலைத்தாயானல், பாசமென்ற தேகமது வறுத்துப்போச்சு பூரணதேகமதாம் நிலைக்கலாச்சே.

## கற்பத்துக்குப்பத்தியம்.

நிலைக்கவே காயசித்தி பண்ணும்போது நேராகவொருபோது போசனந்தான், மலைக்காமல் பச்சரிசி சிறுபயறுங்கூட்டி வாகாக அமுதுசெய்து சர்க்கரை தேனுடனே, குலைக்காக வொருபோது அமுதுகொண்டு குணமாகமுப்பழமும் பாலுங்கூட்டி, கலைக்காமல் கற்பமதைக் கொண்டால் மைந்தா காயசித்தி யுறுதியடா கருதிப் பாரே. 797

பாரப்பா இன்னமொரு பாகங்கேளு பால்தனிலே பச்சரிசி பாகம்பண்ணி, நேரப்பா சர்க்கரையுந்தேங்காய்ப்பூவும் நேராகப்போட்டுகன்றாய் பதமாய்க்கிண்டி, தேரப்பா கனிவகையும் கூடச்சேர்த்து திறமாக வொருபோது அமுதுகொண்டு, காரப்பா கற்பமது கொண்டாயானால் காயமதி லஷ்டமா சித்துமாமே. 798

சித்தென்ன தேகமது இறுகிநல்ல சிவசிவா தேகமது பரமானந்தம், பத்தென்ன மனதுநிலை யாகவேனும் பலருசியைத் தேடினதால் பலனேதுண்டு, கத்தென்ன கருமானங்குருவால்பத்து கருத்தோடே அநுபவித்தால் காணுஞ்சித்து, செத்தென்ன அதின்பிறகு என்னகாணுஞ் சிவசிவா தேகமல்லோ சிவன்கூறாமே.

கூறுக இன்னமொரு பாகங்கேளு குணமாக அமுதுபடி வாங்கி மைந்தா, நேராகத் துவரையுட பருப்புங்கூட்டி நீர்தனிலே அமுதுசெய்து தினைவாய்க்கேளு, சோறுகும்பருவமதில் தேங்காய்ப்பூவுஞ் சுகமாகச் சர்க்கரையும் நெய்யுங்கூட்டி, சேறுகக் கிண்டிகன்று யாறவைத்தால் சிக்கெனவே யிதுநல்ல பதமாமபாரே. 800

பதமான அமுதெடுத்து வொருபோதுண்டு பக்குவமா யதின்பிறது கற்பங்கொள்ளு, மதமான மதக்கவொல்லா மடங்கிநல்ல மகத்தான தேசம்வச்சிர காயமாகும், விதமான அஷ்டசித்து எட்டுமாடும் விவேகமது தான்வளரும் விசிதமாகும், அதமான மனவிருத்தி யகன்றுபோகும் அரகரா அம்பரத்தி னருள்காண்பாயே.

காணப்பா அமுதுபடி சமைத்துக்கொண்டு கருத்துறவே கட்டுமுப்பூ தொட்டுக்கொண்டு, பேணப்பா வொருபோது அமுதுகொண்டு பிலமான கற்பமது கொண்டால்மைந்தா, தேனப்பா அமுதமது கசிந்துகாணுந் தெவிட்டாத அமுதமதைப் பானம்பண்ணு, பூணப்பா குருபதத்தைத் தொழுதுகொண்டு பொல்லாத மாயையெல்லாம் போக்குபோக்கே. 802

போக்கான அமுதுபடி அதனோடொக்க புதிதான எலரிசிபொடித்துப்போட்டு, வாக்காக அமுதுசெய்துவெல்லத்தோடு வளமாக ஒருபோது கொண்டாலப்பா, தாக்கான சடமது வலுத்துப்போ

குந் தன்மையுடன் கற்பமது சார்ந்துகொண்டால், நாக்கான அமு
தமது சொலிக்கும்பாரு நரைதிரைகள் தானொழிந்து நலமாம்பாரே.

நலமாக இன்னமொரு பாகங்கேளு நல்லதொரு அமுதுபடி
வாங்கிமைந்தா, பலமாகச் சீரகமுஞ் சுத்திபண்ணிப் பெருமையுட
னிரண்டுமொன்று யமுதுசெய்து, குலமான வெல்லமதை தொட்டு
க்கொண்டு கூர்மையுட ஒருபோது அமுதுகொண்டால், தலமான
பித்தமெலாம்விரண்டுபோகுந் தாணிதனில்மன்மதன்போ லாவாய் 804
பாரே.

பாரப்பா அமுதுபடி கொழியலாகப் பக்குவமாய்த் தானெடு
த்து வைத்துக்கொண்டு, வாரப்பா கிராம்புதனைக் கஷாயம்பண்ணி
வகையாகக் கஷாயமதி லமுதுசெய்து, சேரப்பா சர்க்கரையைத்
தொட்டுக்கொண்டு திறமாக அமுதுகொண்டால் தேகவச்சிரம்,
காரப்பா மூலமென்ற தெல்லாம்போகுங் கட்டாகக் கற்பமுறையுண் 805
டுதேறே.

தேர்ந்தபின்பு இன்னமோர் பாகங்கேளு திறமாகப் பருத்திவி
தைப் பாலும்வாங்கி, சார்ந்துசம்பா அமுதுபிடி சமைக்கும்போது
சக்கரைதே னூட்டிநன்றாய்ப் பாகஞ்செய்து, கூர்ந்துமிகஉதயமதிற்
கொண்டால்மைந்தா கொண்டதொரு மேகமெல்லா மற்றுநல்ல,
ஊர்ந்துமிக வீரியந்தா னதிகமாகும் உண்மையுள்ளதாதுவெல்லாம் 806
பிலக்கும்பாரே.

பாரப்பா கம்புடனே தினையுங்கூட்டிப் பக்குவமாய்ப் பாலத
னிலே பாகஞ்செய்து காரப்பா இனிப்புடனே அமுதுகொள்ளு கல
ங்காம லொருபோது கொண்டால் மைந்தா, சேரப்பா சதையிலு
ள்ள பித்தநீர்கள் நீங்கிவிடுந் தேகமது குளிர்ச்சியாகும், வீரப்பா
செய்யாமல் கற்பங்கொள்ளு வீறடங்கி தேகம்வச்சிர காயமாமே.

காயவலை.

காயமென்ற காயமொன்று சொல்லக்கேளு கனமானதிரிகடுகு
ஓமங்கூட்டி, நேயமுடன் வறுத்திடித்துப் பொடியேசெய்து திணை
வாகச் சட்டியொன்று காயவைத்து, தாயகமாய்க் கருப்புகட்டி யத
னிற்போட தப்பாம லுருகியதுகுழம்பாய்நிற்கும், ஞாயமுடன்பொ
டித்தவிக் கிண்டும்போது நலமாக மெழுகுபதம் நன்றாம்பாரே.

ஆயப்பா மெழுகெடுத்துவுதயந்தன்னில் அன்பாகக் கொண்
டவுடனே யோகேளு, காமப்பா சொல்லுகிறேன் உதரந்தன்னில் நனி
ருடனே மேகவெட்டை அற்றுப்போகும், தாமப்பா கற்பமதுக்
குறுதியாகுந் தனதான பித்தநீர் தானேபோகும், காமப்பால் கொ 809
ண்டவுடனே றுறுதியாகுங் கற்பூர வாசமதாய்க் காந்தியாமே.

## அரிதாரபஸ்பம்.

காந்தியா மரிதாரங் கல்வத்திட்டுக் கருவான ஆதியத்தங் கூடச்சேர்த்து, பார்த்திபமாய்செயநீரா லரைத்துமைந்தா பக்குவமாயோட்டில்வைத்துப் புடத்தைப்போடு, சாந்தமாய் நீறியது பற்பமாகுஞ் சயமான ரோகமெல்லா மடித்துப்போடு, மாந்தமென்ற வாய்வுகளுன் குன்மந்திரும் மகத்தான சிதசுர மற்றுப்போமே.

## துருசுசெந்தூரம்.

போமென்று விடுகாமல் துருசுதுத்தம் புனிதமுடனுதியத்தங் கூடச்சேர்த்து, ஆமென்று கல்வமதில் அரைத்துமைந்தா அழகான தாரமதாக் கங்கிபூட்டி, சாமென்று மண்சீலை வலுவாய்ச்செய்து சரக்கறிந்து புடம்போடத் தாரங்கட்டி, ஓமென்ற செந்தூரங்காந்தியாக உண்மையுட னிருக்குமதைப் பதனம்பண்ணே 811

பண்ணினதோர் செந்தூரம் பணவிடைதா னெடுத்துப் பாங்கான திரிகடுகு சூரணமேசெய்து, உண்ணியதோர் செந்தூர மதனைத் துன்கொண்டால் உள்வெக்கை மந்தாரகாசம்நீங்கும், புண்ணியனே கற்பமது கொள்ளவென்றால் போக்கறிந்து தேகமதின் நோயைத் தீர்த்து, தன்னிமையாய்க் கற்பமது கொண்டால்மைந்தா தனதாக தேகமது வலுத்துப்போமே. 812

## தாம்பிரபஸ்பம்.

வலுவான தாம்பிரப் பஸ்பஞ்சொல்வேன் மகத்தான துருசுடனே துத்தங்கூட்டி, நலுவாமல் சினமொடு காரபஸ்பம் கலங்காமல் மூலைப்பாலா லரைத்துமைந்தா, இலுகாமல் தட்டதற்குக் கவசம் பண்ணிச் சிக்கெனவேஓட்டில்வைத்து சீலைசெய்து, அழுகாமல்புடம்போட்டு எடுத்துப்பாரு அப்பனே தாம்பிரமும் நீறிப்போமே.

நீறிப்போ மின்னமொரு நெறிமைக்கேளு நெடிதாகத் தாப்பூரந் தகடாய்த்தட்டி, தேறிப்பா ரரிதாரக் கட்டைநன்றாய் தேன்விட்டு அரைத்து அந்தத் தகட்டில்பூசி, பாறிப்பா யோட்டில்வைத்து சீலைசெய்து பக்குவமா யொருமுழத்தில் புடத்தைப்போடு, ஆறிப்பார் கவசமதில் ஒளியங்கிவிற்கும் அப்பனே பழச்சாற்று லரைத்திடாயே. 814

அரைத்துநன்றாய் வழித்தெடுத்து வட்டப்பண்ணி அலரநன்றாய்க் காய்ந்தபின்பு யோட்டில்வைத்து வரைத்தடங்கள் தெரியாமல் மண்ணுஞ்செய்து வலுவாக நிறையறிந்து புடத்தைப்போடு, நிரைத்து அனலாறியே எடுத்துப்பாரு நிறையோடே பழுத்தவெள்ளை யாகுமைந்தா, கரைத்தபழச் சாறதனால் பின்னுமாட்டிக் கருவாக முன்போலே புடத்தைப்போடே. 815

போட்டபுட மாறவிட்டு எடுத்துப்பாரு புதுமையுடன்பூப்போலே நீறிப்போகும், தேட்டமுட னீதைநித்துப் பதனம்பண்ணி சிவா பஸ்பமதின் செயலைக்கேளு, நாட்டமுடன் வெள்ளிதனில் நாற்றுக்கொன்று நன்றாகக் கொடுத்திடாமற் றீரஞ்சாகும், வாட்டமுள பிணிகளுக்குத் தேனிலீந்தால் வாங்காத ருசமமெலா மாண்டுபோமே. 816

போமென்று விடுகாமலின்னமொன்று புத்தியுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு, ஆமென்று தாம்பிரம் பொடியாய்ச்செய்து அப்பனே பழச்சாற்றால் சுத்திபண்ணி, நாமென்று சொல்லுகிறேன் மாதியந்தம் சமமாகஇடைக்கிடைதான் சேர்த்துக்கொண்டு, தாமின்ற பழச்சாற்றா லரைத்துமைந்தா நன்மையுடன்புடம்போட நீறிப்போமே. 817

## கெந்தகபஸ்பம்.

போமப்பா கெந்தகத்தைச் சுத்திபண்ணிப் போக்கோடே ஆதியந்தங் கூடச்சேர்த்து, காமப்பா பழச்சாற்றில் கல்வத்தாட்டி கனலெழுப்ப ஆட்டினதால் மெழுகாய்நிற்கும், ஆமப்பா வழித்து நன்றாய் வட்டுப்பண்ணி ஆறவிட்டு ஓட்டில்வைத்து சீலைசெய்து, நாமப்பா சாக்கிலுட நிதானங்கண்டு நன்மையுடன் புடம்போட நீறிப்போமே. 818

போமப்பா பற்பமதை பணவிடைதான்கேளு புதுமையுடன் தேனிலே கொண்டாயானால், நாமப்பா சொல்லுகிறேன் மேகமெல்லாம் ஓடாமலோடிவிடும் நன்மையாக, தாமப்பா தாதுவிர்த்தி யதிகமுண்டாம் தயவான கெந்தகத்தின் பற்பத்தாலே ஆமப்பாநாகசு பற்பமாகும் ஆதியந்த மமர்ந்ததினு லெல்லாம்போச்சே. 819

## சாதிலிங்கக்கட்டு.

போச்சென்று விடுகாமலின்னமொன்று புதுமையுள்ள சாதிலிங்கக் கட்டுச்சொல்வேன், போச்சென்று வினையாதே ஆதியந்தம் பொருமையுள்ள சாக்கெடுத்துப் பாலாலாட்ட, நீச்சென்று மெழுகாகு மைந்தாகேளு நிசமான கெந்திபற்ப மெழுகிற்சேர்த்து, ஆச்சென்று கல்வத்தி லாட்டிமைந்தா அச்சார லிங்கமதிற் கவசம்போடு. 820

போடப்பா கவசமதை யழுத்திமைந்தா போட்டபின்பு புடத்திற் போட்டுப்போடு, ஈடப்பா இப்படியே மூன்றுபுடம்போடு நலமான சாதிலிங்க மிறுகிகட்டும் ஆடப்பா மதிதனிலே நின்றாடும் அதின்பிறகு ரவிதனிலே அழுத்திப்பாரு, தேடப்பா சிவயோகப் புதுமைதன்னில் தேடினதால் தேகசித்திக் திடமிதாமே. 821

## பூரணதிலேகியம்.

திரமாக இருக்கவென்றால் பூரணதி செப்புகிறேன் புத்தி யை திறமாய்க்கேளு, உரமான திரிகடுகு சூரணமே செய்து உற்றதொ ரு மூலிகையின் காம்புவிரைநீக்கி கரமான சட்டிதனைக் காயவைத்து கருகாமல் மூலிகைகளைத் துமைந்தா, திறமான திரிபலாதி சூரணமே செய்து மேபாகத் தான்கடைந்து வைத்துக்கொள்ளே. 822

கொள்ளப்பா பழச்சாறு வாங்கிநல்ல குணமாக அடுப்பேற்றிப் பாகாய்க்கிண்டி, மெள்ளப்பா பாகுவருஞ் சமயந்தன்னில் மேலாக இருபொடியு மெள்ளக்கொட்டி, மல்லப்பா பிடித்துப்போற் கிண்டு கிண்டி மார்க்கமுள பாகுடனே பொடியுஞ் சேர்த்து, தெள்ளப்பா போலவுமே திரளுமதன்றால் திரமாகப் பிசைந்துருட்டிப் பதனம் பண்ணே. 823

பண்ணியதோர் லேகியந்தான் பூரணதி பார்தனிலே யித்துமு றை ஒருவர்காணார், உண்ணப்பா சண்டகா யளவுவீதம் உண்டபி ன்பு மூலமதில் மனத்தைவைத்து, விண்ணப்பா தாரேசுக்கிமெள்ள ரேசி விதமாக ரேசிதனால் பூரகமேசெய்து, நண்ணப்பா கும்பகத் தே நின்றால்மைந்தா நலமான ஞானத்துக் குறியாமே. 824

## வேறு லேகியம்.

உறுதியுள்ள லேகியந்தா னின்னமொன்று உண்மையுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு, பருதியெனுஞ் சாதிக்காய் சாதிப் பத்திரி பதமான கிராம்புடனே ஏலங்கூட்டி, சுருதியெனும் பின்கூ ட்டி மைந்தமொன்றாய்ச் சுகமாக வெண்ணெயினால் மெழுகாய ட்டி, சுருதிமன தொன்றாய் மூலிகைதான் வாங்கிக் காம்புவிதை த ளை நீக்கிக் கருக்கிடாயே. 825

கருக்குவது பொன்னிறம்போல் கருக்கிக்கொண்டு கடைந்திடு வாய்ப் பொடியாக மைந்தாமைந்தா, உருக்குவது வெல்லமதில் பி சைந்து கொண்டு உடன்சேரு முன்னுரைத்த மருந்துதன்னை, நெரு க்கிநன்றாய்ப்பிசைந்துருட்டிப் பின்கான்தன்னில் கிழத்திமிகப் பத னமதாய் வைத்துக் கொண்டு அரிக்குழுத வெழுந்ததுவைப் பணி ந்துபோற்றி அப்பனே யுடலிற்கு கொண்டிடாயே. 826

கொண்டவுடன் பூரணத்தின் போதைதன்னைக் கூறுதற்கு நாவுமுண்டோ பாவுமுண்டோ, விண்டதொரு மொழிதவறு அறி வுகுன்று விள்ளுகிற நாவலரா மேனிவாடா, அண்டர்பிரானருள் மிகவுஞ் சொலிக்குமப்பா ஆகார பன்னிரண்டு மடங்குவிட்டில் குன்றுத பூரணமாய் போதையாகிக் குணமாகச் சதாபோதையா கும்பாரே. 82

## சாராயதோஷம்.

பாரப்பா போதமய மாகவென்று பரிசுகெட்ட சாராயந் தன்னைக்குடித்தால், வீரப்பா தான்மீறி பித்தங்கொண்டு மெய்மறந்து பித்தநீர் மேலேசென்று, ஊரப்பா தேகமெல்லா மர்ப்புமீறி உண்டதொரு கற்பமெலாம் விழலாய்ப்போகும். நேரப்பா வுதரமது நடுத்துநல்ல நீங்காத நைதிரையாற் சாவான்பரே. 828

## கள்ளின்தோஷம்.

பார்க்கவே கள்ளினுட நேர்மைகேளு பாங்கான பித்தநீர் சிரசிற்கொண்டு ஏர்க்கவே கண்ணொளிவு மயங்கிப்போகும் எழுந்திருக்க வொட்டாது மயக்கித்தள்ளும், சேர்க்கையுடனனல்மீறிப் புலம்புலிக்குஞ் செடந்தளர்ந்து வாசியது சீறுஞ்சீறும், மூர்க்கமுடன் ரவிதேய்ந்து மதியமின்று மோனமில்ல தான்மறந்து போவான்கானே. 829

## புத்திகூறல்.

காணப்பா கள்ளு சாராயத்தாலே கண்மறந்து செத்தவர்களனந்தங்கோடி, வீணப்பா இதுரெண்டுந் தள்ளுதள்ளு வீணருடன் பேசாதே மொழிதப்பாதே, நாணப்பா வென்றமதந் தனைக்கொள்ளாதே தனையறிந்து மதிமுகந் தானேகொண்டால். தூணப்பா அரும்பாகும் அரும்பு தூறுஞ் சொல்லெவாறு அஷ்டசித்துன்னைக்குள்ளாமே, 830

## துஷ்டரைத்தண்டித்தல்.

ஆமப்பா புலத்தியனே யின்னமொன்று அடைவான வுண்மையென்று சொல்லக்கேளு, தாமப்பா பெரியோரைத் தவசியோரை தாமென்றமொழிமறந்த யோகியோரை, காமப்பால் கொண்டசிவ ஞானியோரைக் காலறிந்து போகமதைக் கருதினோரை, நாமப்பா எளியோரை வடியோர்தன்னை நன்றான தாய்தகப்பன் நல்லோர்தானே. 831

தானென்ற சற்குருவுந் தாணிதன்னில் தயவான தெய்வமதில் சொன்னதெல்லாம், வீணென்று தானினைந்து அழும்புபேசி வினைசெய்யுஞ் சண்டாள ருலகத்துள்ளே, நானென்ற மதம்பேசித் திரிவாரப்பா நலமிலாப் பாதகரைக் கண்டாயானல், ஆதியென்றும்பெண்ணென்று மெண்ணவேண்டாம் அநியாயப் பாவிகட்குச் சொல்லக்கேளே. 832

கேளப்பா நாம்சொன்னோம் மனதுநொந்தால் செடிசலங்கி அண்டமுதல் நிற்குமப்பா, ஆளப்பா அவர்கள்மனம் நோகப்பண்

னும் அசடருக்குமாரணத்தைச் சொல்லேனையா, மாளப்பா துரோ
கியுட பேரைச்சொல்லி மனதாக மாரணிக்க மாண்டுபோவான், நா
ளப்பா அதிலே குற்றமில்லை நன்மையிலாத் துஷ்டவரச்சங்காரம் 833
பண்ணே.

பண்ணப்பா அதிதுதீ சொல்லாவிட்டால் பலகோடிசித்தருட
சாபமல்கும், விண்ணப்பா தானிடியு மப்பால்சொன்னேன் வினை
செய்தோன் தனக்குவினை செய்தால்நன்மை, புண்ணப்பா தனக்கு
மருந் திட்டுஆற்று புண்ணாற்று மகிமைபடா புத்தி சொன்னேன்,
சண்ணப்பா வாரிதிபிற்பேய்ச்சுருவை தன்மையுடன்கொண்டெத் 834
துயிலம்வாங்கே.

## பேய்ச்சுருத்துயிலம்.

வாங்கியந்தத் துயிலமதி லிருகுசேர்த்து மந்திரத்தைச் செபித்து
விற் பதனம்பண்ணி, நீங்கிவாத் தீங்குசெய் செய்யும்பாவி திருடர்
களைத் தானழைத்து வைத்துக்கொண்டு, ஓங்கிடுமத் துயிலமதில்
பணவிடைதானெடுத்து உண்மையுடன் வஞ்சகமா யவனுக்கிவாய்,
தாங்கிடுவ துயிலமது சென்றபோதே தான்மயங்கி அறிவிழந்து 835
போவான்பாரே.

பார்மீதி லேதிரிந்து அவனுமைந்தா பஞ்சரிப்பா னுலகோ
ரைக் கண்டால் மைந்தா, நேராகப் பெரியோரைக் கண்டால்மைய
ந்து வெடிதாகக் கீழ்விழுந்து பணிவான்பாவி, ஊர்மீதிற்கழுதையத
ரியுமாபோல் உட்சென்று பற்றவுமேதடிப்போவான், ஆர்மீதிலும
ம்புகழும் பேசமாட்டான் அதட்டிறு வோடிவொ ளரிந்தபாரே.

## வெளவால்துயிலம்.

அறிந்தப்பா பின்னமொரு வஞ்சகனாம் சொல்வேன் அகோர
இப்படியே வெளவால்வாங்கி, பரித்திரண்டு சிறகையு மறுத்தநல்ல
பதமான புகையிலையில் கூடச்சேர்த்து, தெரிந்தநீ புகையிலையில்
பாரமேற்று திரமாகவைத்திடுநீ மைந்தாமைந்தா, பொருந்திரண்டு
மொன்றாகப் பொருத்தப்பாரு புலியோர்கள் காணிற்புகை யிலை 837
யென்பாரே.

பாரப்பா இப்புகையைப் பாவியோர்க்கும் பரிவாகக்கொடுத்
திடவே மைந்தாகேளு, சேரப்பா நிலைதப்பி அறிவுகுன்றி நெஞ்சா
ரப்பித்தமது மேலேநோக்கி, ஊரப்பா திரிவார்காண் பித்தன்போ
லேடுகோரைக் கண்டவுடன் பயந்திடுப்பான், சேரப்பா சண்டதெ
ரைத்தின்பான்பாவி திங்கெட்டு மதிகைந்திப் போவான்பாரே.

## அப்பிரகப்பொடி.

பார்க்கவே அப்பிரகம் வாங்கிமைந்தா பண்பாகப் பொடித்த தனைப் பதனம்பண்ணி, ஏர்க்கவே விபூதியுடன் கலந்துகொண்டு எள்ளளவு தானெடுத்துக் கையில்வைத்து, மூர்க்கமுள மூடர்முன் னே யூதவூது மோகமுள அப்பிரக மதுதான்சென்று, சேர்க்கை யுடன் கண்ணதிலே பறந்துவீழும் க்ஷணத்திலே கண்ணைமெள்ளக் கசக்குவானே. 839

கசக்கையிலே அதாதுவும் விழியில்பற்றி கறகறெனத்தண்ணீ ராய்க் கரைந்துபோகும், மசக்கமதாய்க் கண்ணொளிவு மயங்கிப் போகும் வையகத்தில் நடப்பதற்கு காலங்கேது, பிசக்குமில்லைகண் போனாற் காலங்கேது பிணம்போல மதிகெட்டு அலைவானப்பா, வச க்கமிலா மாளிடரை யகற்றவேணும் வாதவினை தீர்வதற்கு மருந் தாம்பாரே. 840

மருந்தறிந்து பிணிவிலக்கும் வாறுபோலே வஞ்சகர்க்கு மருந் திதுதான் மக்காள்மக்காள், வருந்தியிந்தமருந்துவகை செய்துகொ ண்டு வஞ்சகரைச் சங்காரம் பண்ணவேணும், அருந்தமிழா லுரைத் தபன் னிரண்டுநூற்றில் அவையடக்கம் பொருளடக்கம் அந்தஞ் சொன்னேன், தெரிந்துகொண்டு பன்னிரண்டு நூறைமைந்தா சிவ சிவா அடக்கமதாய்த் தெரிந்துகொள்ளே. 841

கொள்வதற்குப் பன்னிரண்டு சுவாசந்தன்னைக் குறிப்புடனே தானடங்கிக் குருவைப்போற்றி, செல்வதற்கு மூலமதில் மனத்தை யோட்டித் திர்க்கமாய் நல்மனதைச் சேர்த்துக்கொண்டு, வெல்வத ற்கு மேல்மூல நடுவிலுாணி வேதாந்த ரேசகத்தால் பூரணத்தைப பற்றி, சொல்வதற்குவுவமையில்லா கும்பகத்தில்நின்று சோராமல் மதியமுதம் பூரணமாய்க்கொள்ளே. 842

## அறிவுகூறல்.

மதியமுதமென்றதொருவகையைமைந்தா மார்க்கமுடன்கோ டியிலே ஒருவன்காண்பான், விதியறிந்தால் மதியறியு மதிதான்தே ய்த்து விசையான ரவியதனு லமுதங்காணும், பதியறிந்து அமுத மனதைக் கொள்வதற்குப் பக்குவமாய் மூலமதில் மனதையோட்டி, கதிமோட்ச மென்றதன்மேல் மூலம்பாரு கருணையதி லுண்டாகு மறிவைப்பற்றே. 843

பற்றுவது மேல்மூல மாராதாரம் பங்கயத்தின் தரிசனத்தைப் பற்றினுக்கால், புத்தமுதங் கசிந்துமிக வொழுகுமப்பா, புத்தியுட னதையறிந்து கொள்வாயானல், முத்தியுள்ள மோட்சமெய்தன் கடாக்ஷமுண்டாம் மூதறிவு தோற்றுமடா கற்பங்கொள்ளு, அற்று தடா தேகமதில் நின்றநோய்கள் ஆகாரா அமுதாசதேகமாச்சே.

தேகமென்ற மூலத்திற் சூடுகொண்டால் சிவசிவா அப்புகை
தான் மேலேசென்று, ஆகமுடன் சிரசதிலே அனல்தான்மீறி அப்
பால் நீர்ப்பிணைந்து வலியுண்டாச்சு, பாகமுட னந்நீர்தான் தசை
யிற்சேர்ந்து பக்குவாய்ச் சூடுகொண்டால்சுரங்களாச்சு, நாகமுடன்
சுரமீறிவாதபித்தந் தணிந்தநூறல் சேத்துமத்தாக் குயிர்தாளுச்சே.

ஆச்சப்பா சேத்துமந்தான் மீறிற்றானல் அப்பனே தோஷத்
துக்குறியாச்சு, நீச்சப்பாதோஷத்துக் கடிதானென்னை நிலையான
வாதமதில் பித்தமீறி, போச்சப்பா பாதாதி கேசந்தொட்டுப் பொ
ங்கியந்தப் பித்தநீர் பறந்துமீறி, காச்சப்பா தேய்வுடனே வாய்வு
கூடி கடினமுட னுசாசம் புக்கும்பாரே. 846

பாரப்பா மூன்றுமொன்றாய்க் கூடிப்போச்சு பகையான பிரு
திவியு மப்பும்நின்று, சேரப்பா கரைந்துதண்ணீர் மண்ணாய்ப்போ
ச்சு சிவசிவா பஞ்சகர்த்தான் கூத்திதாச்சு, ஆரப்பா அறிவார்கள்
சடலவாழ்க்கை அரகரா நீர்க்குமிழிமாயைமாயை, தேரப்பா கன
ப்போலாஞ்சடலவாழ்க்கை சிவசிவா இதையறிந்து குருவைக்காரே.

## திரிகடுகுலேகியம்.

காரப்பா நீரிழிவு முதலாயுள்ள கர்மவினை யனந்தமடா லக்
கோவில்லை, பாரப்பா பிணியறிந்து மருந்துசெய்யப் பக்குவங்கள்
சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு, தேரப்பா திரிகடுகு சூரணமேசெ
ய்து திறமான முப்பூவுங் கூடச்சேர்த்து, வாரப்பா தேனதிலே
பிசைந்துக்கொண்டு மார்க்கமுடன் கொண்டுவந்தால் சுரங்கள்போ
க்கே. 848

## திரிகடுகுகஷாயம்.

போச்சப்பா கஷாயமொன்று சொல்லக்கேளு புகழாக அரத்
தையுடன் திரிகடுகுகூட்டி, காய்ச்சப்பா தட்டிநன்றாய்க் கஷாயம
வைத்துக் கணக்காக வடித்திருத்து முப்பூச்சேர்த்து, பாய்ச்சப்பா
தேனதிலே கொஞ்சம்விட்டுப் பக்குவமாய்க் கொடுத்திடவே சுரங்
கள்போகும், ஆச்சப்பாசுரமென்றதெல்லாம்போகும் அரகரா குளி
ர்சுரமு மகன்றுபோமே. 849

## சுரத்துக்குத்தயிலம்.

போமப்பா தயிலமொன்று சொல்லக்கேளு புத்தியுடன் சிரக
மும் ஓமங்கூட்டி, காமப்பாசிறுநீரா லரைத்துக்கொண்டு கணக்காக
ஒருபடி நல்லெண்ணெய்வாங்கி, ஆமப்பா பசுவின்பால் கூடச்சேர்
த்து அரைமருந்து அதுவுடனேகரைத்துக்கொண்டு, தாமப்பாமெ
ழுகுபதமாய்வடித்துத் தன்மையுடன் முழுகிவரச்சுரங்கள்போமே.

சுரமான பித்தத்தால் வெட்டையீறிச் சூடுகொண்டு மேகநீ
ரிழிவுகாணும், சிரமான நீரிழிவு மிகுத்ததானால் திறமாக ரசனையுட
னிறங்கும்பாரு, உரமான ரசனையது மீறிற்றானால் உடன்காணும்
நீர்ப்பிளவை யுண்மையுண்மை, திரமாகத் தேகமதால் கண்டரோ
கஞ் சேர்ந்ததொரு நீரிழிவுபோகக்கேளே. 851

## நீரிழிவுக்கஷாயம்.

கேளப்பா கஷாயமொன்று சொல்லக்கேளு கிருமையுள மஞ்
சனத்தின் ஆவாரைவேர்ப்பட்டை, வேளப்பா கடலாஞ்சிப் பட்டை
கூட்டி விபாமுடன் மூன்றுமொன்று யிடித்தாக்கி, நாளப்பா பா
ண்டமதி லிட்டுமைந்தா நல்லதண்ணீர் நாலுபடி எட்டொன்றாக்கி,
வாளப்பா அதிலரைக்காற் படியிடித்து மகனே நீ குறுப்போட்டுக்
குடித்திடாயே. 852

## நீரிழிவுக்குலேகியம்.

குடித்திடுவாய் நாலுமுறை மைந்தாமைந்தா குணமாகும் நீரி
ழிவு குடிலம்நிற்கும், தடித்ததொரு நீரிழிவுபணிப்புத்போகத்தன்
மையுடன் லேகியந்தா னென்றுகேளு, அடுத்ததொரு திரிகடுகு திரி
பலாதி அரகரா வகைக்குஒருபலமாய்வாங்கி, விடுத்ததொரு ஆவா
ரைசெங்கிழுவைக்கொன்றை விதமான மஞ்சனத்தி நெல்லியாமே.

ஆமப்பா அஞ்சுவேர்ப் பட்டைவாங்கி அப்பனே யிடித்திடு
வாய் வெவ்வேறாக, தாமப்பா பொடிவகையோர் பலமாய்க்கூட்டிச்
சக்கையுடன் முன்மருந்து பொடித்துச்சேர்த்து, நாமப்பா சொன்
னஜா பத்திரிசாதிக்காய் நலமான குங்குமப்பூ கிராம்புகூட்ட, காம
ப்பா வகைக்கு அரைப்பலமாய் வாங்கிச் சுகே நீ பொடித்துமுன்
பொடியிற்சேரே. 854

சேர்த்ததொரு பொடிகளெல்லா மொன்றாய்க்கூட்டிச் சக்கை
யுடன் வைத்ததின்மேல் முறையைக்கேளு, சாற்றிடுவா யானைப்பா
ல்தேங்காய்ப்பாலுந் தன்மையுட னூட்டிப்பா விளநீர்பாலும், கோத்
தியாய் வகைக்குவொருபடியாய்வாங்கி நினைவாகப் பாண்டமதில்விட்
டுக்கொண்டு, கார்த்திடுவா யடுப்பேற்றி யனலூட்டிக் காணவே
கொதிகிளம்பும் போதுதானே. 855

தானேதான் கொதிகிளம்பும் பருவந்தன்னில் தப்பாமல் நல்
லெண்ணெய் படியேவார்த்து, மானேகேள் பொடிவகையைக் கொ
ட்டிக்கிண்டு மக்களே மெழுகுபதமாகும்போதில், வீணேதான் திரி
யாமல் ரசனைவாங்கி மெய்யானரசனையடா பலமோரெண்டு, பூனை
தான் முற்குருவின் வாகன்பத்துப் புதுமையுட னிரண்டுடையுமே
பொடித்துப்போடே. 856

புதிசான பிங்கான்
போட்டவுட னிக்கின்று யாறவிட்டுப் புதிசான பிங்கான் பதனம்பண்
தன் பாணிதன் னில், நாட்டமுடன்வழித்துவைத்துப் பதனம்பண்
ணி நலமான சுண்டைக்கா யளவுகொண்டு, தாட்டிகமா யிருபது
நாட் கொள்ளும்போது தப்பாமல் நீரிழிவு தானேயாகும், தேட்ட
முள்ள நீர்பேதம் நாவாட்சி தீராத பிளவையொடு மேகம்போமே.

## நீரிழிவுக்குத்தயிலம்.

போதப்பா தயிலமொன்றுசொல்லக்கேளு பொல்லாதமேகநீ
ரிழிவுபோக, ஆமப்பா கஸ்தூரித் தயிலஞ்சொல்வேன் அப்பனே
புலத்தியனே நன்றாய்க்கேளு, தாமப்பா நல்லெண்ணெய் ஆவின்நெ
ய்யுந் தன்மையுள்ள நிம்பவெண்ணெய் வகைமூன்றுக்கும், நாமப்பா
வகைக்குஒரு படியாய்வாங்கி நலமான பாண்டத்தி லிட்டுக்கொ 858
ள்ளே.

கொள்வதற்குச் சந்தனமோர் பலந்தான்பத்துக் கூர்மையுட
னெண்ணெய்தனிற் கரைத்து மைந்தா, விள்வதற்குத் தாய்கொள்
ளிக் கிழங்குச்சாறும் விதமானபழச்சாறும் படிதான்வாரு, சொல்
லுமிள நீர்தான்படி ரெண்டுவாரு சுத்தமுள்ள சாதிக்காய் சாதிப்
பத்திரி, சொல்வதொரு சீரகமும் பழச்சாற்றுலே திளஅரைத்துத் 859
தப் பாகுடனேசேரே.

சேர்த்துமிக அடுப்பேற்றித் தீயைமூட்டிச் செம்மையுடன்மெ
ழுகுபத மாகும்போதில், பார்த்துமிகக் கஸ்தூரிப் பலமரைதான்
வாங்கிப் பக்குவமாய்க் கரகமதில் போட்டுமைந்தா, வார்த்திடுவாய்
த்தயிலமது கரகத்துள்ளே மகத்தானதயிலமதைப் பதனம்பண்ணி,
போற்றிமிக முழுகிவர மேகக்காங்கை பொல்லாதநீரிழிவுக்ஷயங்கள் 860
போச்சே.

## க்ஷயத்துக்குக்கஷாயம்.

போச்சப்பா இலேத்துமத்தால் சயங்கள்மீறி பொல்லாத இரு
மலாய் பித்தமீறி, காச்சப்பா அனல்மீறி தேகம்வற்றி காங்கை
யொடு இருமலிலே கசமாய்ப்போவான், பாச்சப்பா சயமானரோ
கந்தீரப் பக்குவந்தான்சொல்லுகிறேன்பண்பாய்க்கேளு, ஆச்சப்பா
ஆடாதோடை யிடித்துக்கொண்டு அமுரிவிட்டுக் கஷாயம்நீ யள 861
வாய்க்காய்ச்சே.

## க்ஷயத்துக்குலேகியம்.

காய்ச்சினதோர் கஷாயமதை யிறுத்துக்கொண்டு கனமான
முப்பூவில் வராகன்சேர்த்து, பாய்ச்சுவாய் தேகமதிற் கஷாயந்தன்
னைப் பக்குவமாய் மூன்றுநாள் கொள்ளும்போதில், மாச்சலென்ற
இருமலீ தகலுமைந்தா மனதாக லேகியந்தானொன்றுகேளு, தாட

சியிலாத் தூதுளைக் கண்டங்கத்திரி சமூலமே யிடித்தான்றாய் வடித்துக்கொள்ளே. 862

கொள்ளப்பா இருவகையு மொன்றாய்ச்சேர்த்து குருவான அமுரிவிட்டு ரவியிற்காய்ச்சு, அள்ளப்பா இப்படியே பத்துமுறைகாய்ச்சு அதின்பிறகு எட்டிலொன்று சர்க்கரையைச் சேர்த்து, விலலப்பா மூப்பூவுஞ் சேர்த்துக்கொண்டு விசையான பசுவின்பால் நெய்யுங்கூட்டி, நல்லப்பா அடுப்பேற்றிப் பொடியைக்கொட்டி நலமானமெழுகுபத மாகவாங்கே. 863

க்ஷயத்துக்குத்தயிலம்.

வாங்கியே நெல்லிக்கா யளவுகொண்டால் மாறாத சயங்களெல்லா மாறிப்போச்சு, ஏங்கியே ஓடிவிடுஞ் சயமாம்பேய்தான் என்சொல்வேன் மண்டலத்திற் தேகசித்தி, தூங்கியே வாடாதே தயிலமொன்று சொல்லுவேனே புலத்தியனே நன்றாய்க்கேளு, தேங்காயின் பால்நாழி தயிருநாழி செம்மைநிறப் பசுவின்கோ மியமும்வாங்கே.

வாங்கினன்றாய்ப் பாண்டமதி லிட்டுக்கொண்டு மைந்தனே பழச்சாறு கொடுப்பை முசுமுசுக்கை, பாங்குடனே வகைக்குவொரு படிதான் வார்த்துப் பக்குவமாய் மிளகுவொரு படிதானவாங்கி, ஆங்கிகொண்ட அமுரியினாலரைத்துவாங்கி அப்பனேபாண்டமதிற் கரைத்துக்கொண்டு, சாங்கமாய் நல்லெண்ணெய் படிநால்வார்த்து சமர்த்தாக அடுப்பேற்றிக் காச்சுகாச்சே. 865

காச்சினன்றாய் மெழுகுபத மானபின்பு காகமதில் தான்வடிக்கும் போதுமைந்தா, ஆச்சியே காகமதிலண்டச்சுன்னம் அன்பானதாரபஸ்பங் கஸ்தூரியோடு, தாட்சியில்லா வகைக்குஅரைப் பலந்தான்போடு சமத்தாகத் தயிலமதைவடித்துமைந்தா, தேச்சுமேமுழுகிவரச் சயங்கள்போச்சு சிவசிவா தேகமது வலுத்துப்போச்சே.

குன்மத்துக்குலேகியம்.

போச்சப்பாகுன்மமென்றதெல்லாம்போகப் புதுமையுள்ளலேகியந்தா னென்றுகேளு, காய்ச்சியதோர் கருப்புட்டிப் பலமபத்துவாங்கிக் கருவான அமுரியினால் கரைத்துக் கொண்டு, பாய்ச்சவாயடுப்பதனி லனலைமூட்டிப் பக்குவமாய்க் காய்ச்சவாய் பாகுபோலே, தாட்சியில்லாப் பாகுதனில் சேர்மருந்தைக்கேளு தப்பாமல் காரமுடன் சாரம்வாங்கே. 867

வாங்குவாய் வெடியுப்புச் சவுக்காரந்தான் வளமான வளையலுப்பு இந்துப்போடே, பாங்குடனே பொரிக்காரஞ் சூடனுப்பு பக்குவமாய் யெட்டுவகை யுப்புவாங்கி, சாங்கமாய்பொடித்தப்பா அதனிற்சேர்த்து சமரசமாய்க் கிண்டிவர மெழுகுமாகும், ஆங்கவனே

ந்திரும் உத்தமனே யிரஞ்சு நாளில்மைந்தா, வீணென்ற மூலமெல்
லா மொழிந்துபோகும் விசையாக இன்னமொரு பாகக்கேளே.

## மூலத்துக்குலேகியம்.

கேளப்பா கருணையென்ற கிழங்குவாங்கிக் கெட்டியா யுமியி
ளலித்துமைந்தா, நாளப்பா திபிலையைப் பொடியாய்ச் செய்து
நலமான கிழங்குடனே பிசைந்துகொண்டு, வேளப்பா முப்பூவுங்
கூடச்சேர்த்து விசையாக அடுப்பேற்றிக் கிண்டும்போதில், ஆளப்
பாநல்லெண்ணெய் அளவாய்விட்டு அரகராமெழுகுபதமாகவாகே:

வாங்கியதோர்லேகியத்தை அந்திசந்தி வரிசையாய்க்கொள்ளிச்சா
யளவுகொள்ள, ஏங்கியேபறந்தோடு மூலமெல்லா மென்னசொல்வே
னிரஞ்சு நாளில்மைந்தா, பாங்குடனே புள்மூலம் வெளிமூலந்தான்
பற்றிநின்ற சீமூலம் ரெத்தமூலம், தாக்கிநின்ற சுதமூலம் வாய்வுமூ
லம் தப்பாமல் மூலமொன் பதுவும்போமே. 876

## மூலத்துக்குத்தயிலம்,

பேர்மப்பா தயிலமொன்று சொல்லக்கேளு புன்னையென்ற
நல்லெண்ணெய் செய்யுங்கூட்டி, ஆமப்பா பழச்சாறுங் கலிருந்தே
ர்த்து அன்பாக கருள்ளிச் சாறுக்கூட்டி, தாமப்பா அடுப்பேற்றிக்
காய்ச்சும்போதில் தன்மையுட னெங்கோவைக் கொஞ்சம்விட்டு, நாம
ப்பா மெழுகுபத மானபோது நற்காரகமதிற்பூரம் புழுகுப்போடே.

போட்டதொருகாகமதில் வடித்துமைந்தா புகழாகத் தலைக்கி
ட்டு முழுகச்சொல்லு, தேட்டமுடன் முழுகிவர மூலவாய்வு இறங்
கெட்டு வோடிவிடு மப்பா சொன்னேன், நாட்டமுட னேயகன்று
தேகப்பொன்போல் நன்மையுள்ள தேகமதாய்கனியமாகும், வாட்
டமில்லா லட்சுமிதன் கடாக்ஷமுண்டாம் மன்மதன்போல் காந்திபு
ண்டா மைந்தாபாரே. 878

பாரப்பா பன்னிரண்டு ஆற்றுக்குள்ளே பாடிவைத்த பொருள்
ள்தனெல்லா மடக்கமாகும், கோரப்பா பன்னிரண்டா யிரச்சுருக்கம்
நிலைவாக இந்நூலைப் பதனம்பண்ணு, காரப்பா குருபதத்தைக் கு
ணமாய்ப் போற்றிக் கற்பூர தீபமதிற் கருத்தைவைத்து, சாரப்பா
மதியமுதம் பானம்பண்ண சதாபோதை சிவயோக மாகுந்தானே.

## கெற்பவியாதிபோக.

தானென்ற கெற்பநோய் தீர்வதற்குத் தயவான கருவொன்று
சொல்லக்கேளு, ஊனென்ற கருகெடுத்துக் கருக்கிமைந்தா உண்மை
யுடன் சிறுநீரிற் றைலத்துடட்டி, வானென்ற ரவிதனிலே காயப்
போடு மார்க்கமுடனிப்படியே பத்துமுறைபண்ணு, கோனென்ற

அமுரியிலே கரைத்துமைந்தா குருநமையுடன் தெளிவிருந்தா ரவி யில்லையே. 880

வைக்கவே யுப்பதுவும் படரும்பாரு வரிசையுடன் பதனமதா யெடுத்துமைந்தா, தைக்கவேபிங்காணிற் பதனம்பண்ணித் தாரணி யில் பெண்களுக்குக் கெற்பநோய்தான், தைக்கவே வந்ததென்ன வென்றால்மைந்தா நன்மையுடன் றுவாகும் காணிற்றானே, மைக்க வே மாப்பண்டம் பால்பழத்தினாலே வந்ததடா ருதகத்தின் வாய் வுதானே. 881

தானென்ற கருக்குழியில் வாய்வுதங்கித் தளர்ந்தொரு சேனையினால் தசைதான்மூடி, உனென்றதேகமெல்லா மதர்த்துநல்ல உண்மையுள்ள அடிவயிற்றில் வலிபுண்டாச்சு, பானென்றகருக்குழி தான் விளக்கமற்றுப் பாமாலைவிக்குதவென்ற அறுகாதையா, ஏனென் றா லதிலே வாய்வுகொண்டு இருந்ததினால கெற்பமது இல்லை தானே. 882

## கெற்பவாய்வுக்குப்பு.

தானப்பா கெற்பமதில் வாய்வுபோகத் தயவாகமுன்சொன்ன வுப்பைமைந்தா, தேனப்பா அதின்றனுக்கிக் குழப்பியுண்ண தேகத்திலுள்ள மலசலங்கள் சேரப்போகும், காணப்பா கெற்பமதில் வாய்வுபோகும் கருவான கருக்குழியும் விளக்கமாகும், கோணப்பா குருவருளால் கெற்பமுண்டாம் கூறுகிறே னின்னமொரு பாகந் கேளே. 883

## கெற்பமுண்டாகஎண்ணெய்.

கேளப்பா தேங்காய்ப்பால் மஞ்சட்பாலும் செடியானதேவ லாவீழிச்சாறும், நாளப்பா நிலவாரைச்சாறுங்கூட்டி நன்மையுடன் வகைக்குநாழி படியாய்வாங்கி, ஆளப்பா பாண்டத்தி லிட்டுநல்ல அன்பான விளக்கெண்ணெய் படியேவார்த்து, மேலப்பா இம்மருந் துக்கு வகையாய்க்கேளு மேன்மைதிரி கடுகுதிரி பலையிந்துப்பே.

உப்பதுவுங் காற்பலந்தான் வாங்கிநல்ல உடன்சேர்த்துமருந்து அரைபலமாய்வாங்கி, செப்பவே பெருங்காயம் விராகன்பத்து சே ரவே பொடித்தெண்ணெய் தனிலலக்கி, தப்பாமலடுப்பேற்றி மெ ழுகுபதந்தன்னில் தயவான குருப்போட்டு வடித்துமைந்தா, அப் பாலே பதனமாய் வைத்துக்கொண்டு அதின்விபரஞ் சொல்லுகி றேன் மைந்தாகேளே. 885

கேளப்பா விலக்கமுள்ள மூன்றுநாளுங் கெணிதமுடன் படிய ரைக்கால் வீதங்கொள்ளு, நாளப்பா மூன்றுநாள் கொண்டபோது நலமில்லாச் சிதமொடு மேற்கட்டெல்லாம், தாளப்பா சமூன்றுவிடும்

வாய்வுபோகும் தருகாத வயிற்றுவலியுடனேகிற்கும், ஆளப்பா மறு
ருதக யில்லையில்லை அரகார கெற்பமது வுண்டாம்பாரே. 836

பாரப்பா வுலகத்தில் மலமேடயில்லை பக்குவமாய்ச் செய்வோர்
க்கு எல்லாஞ்சித்தி, காரப்பா குருபதந்தனைத் தொண்டிபண்ணு கா
யாதிகற்பமதை மறந்திடாதே, ஆரப்பா வுனக்கிநி ஆதிகற்பம் அனு
தினமும் நேசமுடன் பூசைபண்ணு, வீரப்பா செய்யாமல் மனநட
ங்கிவில்லு விண்ஞான கண்ணொளியை மேவிப்பாரே. 887

பாரப்பா பதிதலத்தில் மதியொங்கிப் பாலகனே ரவிபெரு
க்கி லமுதஞ்சிந்தும், ஆரப்பா வுனக்கிநி அமுதங்கொண்டு அன்
பான பூரணத்தை அறிவார்பாரு, தேரப்பா இந்நூலைப் பதனம்ப
ண்ணு, செகத்தோர்க்கு இந்தநூலைச் செப்பவேண்டாம், காரப்பா
பன்னிரண்டு நூறமைந்தா கண்ணிமைக்குள் வைத்ததனைப் பத
னப்பண்ணே. 888

## குஷ்டத்துக்குத்தயிலம்.

பண்ணப்பா குஷ்டமொடு சறப்பானபோகப் பண்பொன்று
சொல்லுகிறேன் மைந்தாகேளு, நண்ணப்பா பரங்கியுட பட்டை
வாங்கி நலமான பழச்சாற்றி லூறப்போட்டு, விண்ணப்பா ரவிபட
வே யுலரப்போட்டு விசையாக இப்படியே முறையேபத்து, தண்
ணப்பா நன்றாக வுலர்ந்தபின்பு தாக்கிநன்றா யிடித்துவடிக் கட்டு
வையே. 889

சட்டாகச் சிவனார்தன் வேம்பைவாங்கிக் கண்டமதாய் நறுக்கி
குழித்தயிலம்வாங்கி, திட்டமதாய்த் தயிலமதிற் பட்டைத்தூளுஞ்
சேர்த்துநன்றாய்ப் பிசைந்துருட்டி வைத்துக்கொண்டு, மட்டாக
வெல்லிக்கா யளவுகொண்டால் மாறாத கிரந்தியொடு குலைப்புண்கள்,
தொட்டவுடனோடுகின்ற குஷ்டரோகஞ் சொரிசிரங்கு பெருஞ்சிர
ங்கு இன்னங்கேளே. 890

கேளப்பா மேல்புற்று வெடிப்புவெள்ளை சேராத செவியடை
ப்பு மூக்கடைப்பு, தாளப்பா மேகத்தால்வக்கரோகந் தருகாமலோ
டுமிரு பதுநாட்கொண்டால், கோளப்பா சீந்திலமுப் பூவுஞ்சேர்
த்துக் குணமாகக் கொண்டவுடன் குடிலகீக்கும், நாளப்பா நாளு
க்கு நாளேதேகம் நன்றாக்கா ணுமடா நமனோடானே. 891

## சொரிசிரங்குத்தயிலம்.

நாடாம லின்னமொரு தயிலஞ்சொல்வேன் நலமான தேங்கா
ய்பால் படிதான்வாங்கி, வாடாமல் துரிசிஅரி தாரங்கெந்தி வகை
யொன்றுக் கிருகழஞ்சி வாங்கி மைந்தா, தேடாம லரைத்தப்
பால் தனிற்கலக்கி செம்மையுடன் காய்ச்சி எண்ணெய்த் திறமாய்

வாங்கி, ஆடாம லெண்ணெய்தனை வைத்துக் கொண்டு அப்பனே
முற்குருவில கழஞ்சிசேரே. 892

சேர்த்தவொரு எண்ணெய்தனை வைத்துக்கொண்டு தேகம
திற் றன்றடவி சாயங்காலம், பார்த்தல்லோ அரப்பிட்டுக் குளித்
தாயானால் பறக்குமடா சொரிசிரங்கு பறங்கிக்குஷ்டம், மாறானை
மேல்பற்று வெள்ளைவண்டுகள் மாறுமடா அதனிலொரு வயணங்
கேளு, காத்தல்லோ மோருஞ்சோ றுண்டுமைந்தா காசிடைதானு
ண்டிடவே கர்மம்போமே. 893

## பேதிக்குழம்பு.

போமப்பா மலசலங்கள் போவதற்குப் புகலுகிறேன் புளித்தி
யனை நன்றாய்க்கேளு, நாமப்பா வாளமதைப் பழத்தின் சாற்றால்
நன்றாக மூன்றுநா ளூறப்போட்டு, தாமப்பா மறுநாள்தா னவிழ்த்
துப்போடு சண்டாளகஞ்ச தவமற்றுப்போகும், ஆமப்பா பருப்பெ
டுத்துக் காயப்போட்டு அப்பனே நன்றாக வுலாவைவே. 894

வையப்பா லிங்கமொரு வராகன்வாங்கு வாங்கடா அதுக்கி
ட்டிப் பொரிக்காரந்தான், மெய்யப்பா அதுக்கிட்டி வாளஞ்சேரு
விபரமுட னதுக்கிட்டிவிள்ளாக்கேளு, செய்யப்பா ஆமணக்கம்பரு
ப்புங்கூட்டித் திறமாகத் தானரைக்கும் போதில்மைந்தா, கையப்
பா திறந்துடனே அரைக்கும்போதில் கருவான முப்பூவில் விராக
ன் சேரே 895

சேர்த்தல்லோ ஆட்டிநன்றாய் வழித்துமைந்தா திறமாகச் சிமி
ழ்தனிலே பதனமபண்ணி, பார்த்தல்லோ குன்றியிடை யிந்தால்
மைந்தா பக்குவமாய் மலசலங்களகன்றுபோகும், கார்த்தல்லோ
பேதியது மீறிற்றானால் கடுகவே மோருஞ்சோ றுண்ணநிற்கும், மா
ற்றுநீ ரணைபோட்ட வாறுபோல அடைக்குமடா மோரினுட ஆண்
மைதானே. 896

## நவாச்சாரபேதி.

தானென்ற இன்னமொரு பேதிசொல்வேன் தயவான நவாச்
சாரம் பலமொன்றுவாங்கி, நானென்றகொடிக்கள்ளி பாலில்நாட்டி
நன்றாகக் கல்வத்திற் மைபோலாட்டி, தானென்ற சிமிழதனிற் பத
னம்பண்ணித் தப்பாமற் குன்றியிடை தயவாய்க்கொண்டால், ஊ
னென்ற மலக்கட்டு ஜலக்கட்டெல்லாம் ஓடுமடா அதன்பிறகு பொ
றுக்காதன்றே. 897

பொறுக்காதே மயங்கினதால் மைந்தாமைந்தா பொக்கென
வே நிற்பதற்குப் புதுமைகேளு, மறக்காதே எலுமிச்சம் பழத்தை
த்தின்றால் மறிக்குமடா பேதிதனை வளமாம்பாரு, தருக்காதபெரு
வயிறு வாய்வுகட்டித் தப்பாத மகோதரம் கிராம்பலோடு, உருக்கா

தேவுருகிமல ஜலக்சட்டோடே உள்வினைகள் திருமடா வுண்மைதானே. 898

## அகஸ்தியக்குழம்பு.

உண்மையாய் நம்முடைய குழம்பைக்கேளு உறுதியுள்ள பெருங்காய மிந்துப்போடு, தன்மையுள்ள கடுகுரோகணியுங்கூட்டித் துயவான ரசமுடனே காரங்கூட்டி, நன்மையுள்ள திருவிசமுஞ் சிலையுத்தாரம் நல்லகருஞ்சீரகந் திப்புலியுஞ்சேர்த்து, வண்மையுடன் துகைபார்க்கப் பத்துமாச்சு வரிசையுடன் சரியிடையாய் வாங்கிக்கொள்ளே. 899

வாங்கியதோர் மருந்துக்கு இடைதான்வாளம் வளமாக அதுக்கறைதான் பச்சைசேர்த்துப், பாங்குடனே கல்வத்தி லிட்டுக்கொண்டு பக்குவமா யீராறு சாமமாட்டி, தீங்கிலா முப்பூவும் பத்துக்கொன்று சேர்த்துநீ திறமாகச் சாமமாட்டு, சாங்கமாய்மருந்தரைக்கும் போதில்மைந்தா தயிருடனே சோருண்டு தயவாயாட்டே.

ஆட்டிநன்றாய் வழித்தெடுத்து மேதிக்கொப்பு அடைவான சிமிழதனிற் பதனம்பண்ணி, நாட்டிலே மானிடர்க்கு வருநோய்க்கெல்லாம் நலமான அனுப்பான மறிந்துசெய்தால், வாட்டமுடனோடிவிடு மைந்தாகேளு மகத்தான வித்தையடா குழம்பின்மார்க்கம், தேட்டிலே யிக்குழம்பைத்தேடிக்கொண்டு சிவசிவநம்முடைய பேர்வைத்தாரே. 901

பேர்வைத்த தாமென்றால் மைந்தாகேளு பெருமையுள்ள சித்தர்தபோதனர்கள்கூடி, நேர்வைத்த மருந்துருதி குறிப்பைக்கண்டு நேர்மையுள்ள அகத்திசர் குழம்பென்றார்கள், பார்வைத்த அகத்திசர் பண்பறிந்தால்மைந்தா பகரினதோர் குழம்புறுதி யறிவானப்பா, கூர்வைத்த குழம்புறுதி யென்னவென்றால் குணமானபரிட்சையடா வுயிருமாச்சே. 902

உயிரான பரிச்சைதனை யறிந்துகொண்டு உண்மையாய் நம்முடைய குழம்புபண்ணி, பயிரான மானிடர்க்கு வருநோய்கண்டு பயச்சுகிற விதமுனைக்குப் பகருவேன்கேள், துயரான லோசனுக்குச் சூல்கள்கண்டால் சுகமாக இஞ்சியைநீ ரசம்பண்ணி, வயிரான குழம்பிற்கால் பணவிடைதான் கரைத்து வரிசையாய்க்கொடுத்தவுடன் பேதியாமே. 903

ஆமப்பா பேதித்த போதில்மைந்தா அனுகின்ற காமனைத்து மகன்றுபோகும், தாமப்பா சோறுபொங்கி வெந்நீர்விட்டுத் தாகமது தானடங்கக் குடிக்கச்சொல்லு, நாமப்பா சொல்லுகிறோம் பத்தியமில்லை நன்மையில்லா தோஷமது காடிற்றானால், போமப்பா கடுகளவு தண்ணீர்போட்டுப் புளிசமுட ஞானிலே நீற்றுவாயே.

தீற்றினன்றாய்க் கண்ணிலிட்டால் புழுத்துப் பார்ப்பின் திற
மான நாவறட்சிவிட்டுப்போகும், பார்த்தானன்றாய்ப்பரிசுடனே பிணி
யறிந்து பருவமுடன் செய்துவந்தால் பலனுமைந்தா, கார்த்துமிகக்
கருவறிந்து குணத்தைக்கண்டு காலறிந்து மேலறிந்து காமம்போ
க்கி, போற்றினன்றாய் மருந்துமிகச்செய்தாயானால் பூலோகராஜரிஷி
யாவாய்பாரே. 905

## பிளவைமுதலானதுகளுக்கு.

பாரப்பா பிளவைமுதலேழுநோய்க்குப் பண்பாகவுமிநீரால்
குழைத்துப்பூசு, நோப்பா வீரமெல்லாந்தீருந்தீரும், நேர்மையுடன்
புரைமுதலாய்ப் புண்கள்தீரும், காரப்பாவிஷமனைத்தும் போகவெ
ன்றால் கடுகளவு கண்ணிலிடக் காணுமேதோடும், சாரப்பா விசியனுக்
குச் சிறுபாகைச் சாற்றில் தன்மையுடனீகுழைத்து கண்ணில்
தீற்றே. 906

தீற்றியே கடிவாயில் பூசிப்பாரு செம்மையுடன் விஷந்தீருந்
திறந்தானப்பா, போற்றியே சிலவிஷங்களனைத்தும்போகப் புது
மையுடன் சிறுகீரை சிறுகவாங்கி, பார்த்துமே கடுகளவு கரைத்து
க்கொண்டால் பறக்குமடா சிலவிஷங்களணைத்து மைந்தா, காத்
துமேவயித்திய மாயிரத்தில் மைந்தா கருவாக வயித்தியத்திற் கரு
தினேனே. 907

கருதினேன் சவுமியசாகரத்தில்மைந்தா கருவான வழலைமு
தல் சாக்குக்கெல்லாம், உறுதியாய்ப் பேர்வகையு மாரணமுஞ்சொ
ன்னேன் உண்மையுள்ள சத்துருமித் துருவுஞ்சொன்னேன், பருதி
யெனும் பலதிரட்டில் சரியையொடுகிரியை பாங்கான ஞானமுடன்
யோகஞ்சொன்னேன், அறுதியாய்ச் சகலசாஸ்திரங்களுக்கு மான
குரு சூத்திரமா யடக்கினேனே. 908

அடக்கினேனவையடக்க மிந்தநூலில் அடக்கமென்ற பொரு
ள்களெல்லா மிதிலேசொன்னேன், விடக்கெடுத்த நாய்போலே வா
ய்விண்பேசில் மேதினியிலுனதுசிரம் வெடித்துப்போகும், முடக்க
மில்லை பூரணியா ளிட்டசாபம் மொழிதவறி யணுகளவு வெளியிற்
போட்டால், நடக்குமிரு வாசியது காணுதோடும் நடப்பறிந்து வா
சியைநீ கட்டுகட்டே. 909

சட்டாக வயித்தியபூ ரணத்தானப்பா கருதினேனூற்றிலாதி
யந்தம், இட்டமாய்ப் பற்பவகை செந்தூரங்கள் திறமான லேகியங்
கள் சூரணங்கள், சட்டமாய்க் கற்பவகை ரசாயனங்கள் சாந்தமாய்
கஷாயவகை குடிநீர்போக்கு, மட்டாகத் தயிலமுதல் மாத்திரைக
ளெல்லா மார்க்கமுடன் சொற்பமதாய் வசனித்தேனே. 910

தே, மைந்தனை மெய்யுடனே பொய்சொல்லாதே, காளப்பா அதுங்கொண்ட சண்டாளர்க்குந் தாழ்ந்திருற் குற்றமில்லை தன்மையாகும், காலப்பா காறித்துப்போகஞ்செய்யுங் கற்பமுள்ள தேகமதைக் காருகாதே. 1083

காரப்பா அவர்கள்மனங் கனியவேதான் கனிந்திருக்கு சகல சித்தர் கைக்குள்ளாகும், பாரப்பா பன்னிரண்டு நாளைமைந்தா பக்குவமாய்த் தாமெடுத்துப் பதனமாக, சேரப்பா பொருளைத்து மனதிற்சேரு சேர்ந்துகொண்டு மனதடங்கி அறிவினிலு, ஆரப்பா வணங்கிடு சொல்லப்போறேன் ஆகார அடிமுடியி லமர்ந்துநில்லே. 1084

அமர்ந்துமிக நின்றிறு வருள்கைகூடும் ஆனந்த வொளியுட அருளோ வாய்க்கும், நமந்துமிகப் போகாமல் நாலைக்காரு நாளைனை பூரணமே தெய்வந்தெய்வம், சிவந்தசடந் தனாமற் கற்பங்கொள்ளு சிவசத்தி ரெண்டையுமே திரைமூங்காரு, சமைந்ததொரு கற்பமதைத் திருமூங்கொண்டு சதாகாலம் பூரணத்திற் சார்ந்துநில்லே 1085

நில்லென்ற சொல்லறிந்து நின்றுகொண்டு நோரான பூரணத்தில் மனதைவைத்தால், சொல்லொன்றுந் தப்பாது எல்லாஞ்சித்தி சொரூபமுள்ள அமுதரசஞ் சொலிக்குமப்பா, கல்லென்ற கல்லறிந்து காரியேற்றிக் கடுங்கார மானதொரு ஆனைக்கல்லாந், தெல்லென்ற ஆனைக்கல் மடிந்துதாருஞ் செந்நாசாக்கத்தினையுங் கட்டிப்போச்சே. 1086

## ஐங்கோலத்தயிலம்.

சட்டாக ஐங்கோலந் தயிலமொன்று கருத்தாக வுந்தனுக்குச் சொல்லக்கேளு, மட்டான அழிஞ்சியடா மதனப்பூடு மைந்தனே பதிவான பதியைப்பார்த்து, திட்டமாப் பதியறிந்து பதியிற்சேர்ந்து இடமாக மனதறுதி யாகநின்று, சட்டமா யஷ்டபந்த மெட்டுஞ்செய்து சமூலமாய்வடவேரு தன்னைவாங்கே. 1087

வாங்கியந்த வடவேரை மைந்தாகேளு வரிசையுடன் கண்டமதாய் நறுக்கிக்கொண்டு, பாங்குபெற நிழலுலர்த்தி பாண்டத்திட்டுப்பக்குவமாய் முப்பூவுங் கூடச்சேர்த்து, தீங்கில்லாரவிபீசங் கூடச்சேர்த்துச் செம்மையுடன் வாய்மூடி சீலைசெய்து, சாங்கமா யீசானம் பூசைபண்ணி தன்மையுடன் குழித்தயிலந் தயவாய்வாங்கே.

வாங்கியந்த தயிலமதை மேருக்கேற்றி வரிசையுட னீசானம் பூசைபண்ணி, தாங்கியந்தத் தயிலத்திற் பணவிடைதான் கொள்ளு தயவாக நாடிநரம் பிறுகிப்போகும், தாங்கியதோர் துக்கமதுமோடிப்போகுஞ் சுந்தரம்போல் கற்பூரத்தேகமாகும், பாங்குபெற நரைதிரைகளுதிர்ந்துபோகும் பழுப்பான சதையெலும்பு வலுத்துப்போமே. 1089

வைத்துப்போம் தேகமது பழுக்கொண்ணாது வாசியது நின்றிலங்குந் தீபம்போலே, துருத்தசடஞ் சூட்சமாய்த்துலங்குமையா கருக்காக செவுனசித்தி கைக்குள்ளாகும், அழுத்தமுடன் அஷ்டசித்து எட்டுமாகும் ஆகாரதேகமது தங்கம்போலாம், பருத்ததங்கத் தேகமதனைச்சொல்வேன் பரமகயிலாசமென்றதேகமாச்சே.

ஆச்சப்பா தயிலமதிற் புழுகுசேர்த்து அப்பனேமத்தித்து திலதம்போடு, பேச்சப்பா பிறருக்குன்றாய்க்கேட்கும் பெருமையுள்ள செடந்தையவர் காணமாட்டார், நீச்சப்பா வெகுதுலைகன்னைட் டங்தோன்றும் நேராகப் பாதாளந் துலைதானேனும், காய்ச்சபபா தயிலமதைக் கையில்செய்து கருவாக சாக்கோடு கட்டிப்போமே.

போமப்பா பூரமொடு புழுகுசேர்த்துப் புனிதமுள்ள தயிலமதால் கல்வத்தாட்டி, தாமப்பா இலைதமிட வசியமாகும் தன்மையுடன் பார்ப்போர்க்குத் தீபம்போலாம், நாமப்பா சொல்லுகிறோம் உலகினுள்ளோர் நாதாந்த நாதனென வணங்குமையா, ஆமப்பா அழிஞ்சுயுட ஆண்மைமெத்த ஆறியப் போறுர்ஏரழிஞ்சிதானே.

ஏரழிஞ்சித்தயிலம்.

தானென்ற ஏரழிஞ்சி யுலகத்துள்ளே தயவாக மெத்தவுண்டு அறியமாட்டார், கோனென்ற குருவருளாற் காணவேணும் குருமுறையாய்க் கைபாகஞ் செய்யவேணும், நானென்ற அகமதினால் முறைதப்பி நரகான நரகமது எய்தும்பாரு, தேனென்ற சற்குருவின் கடாட்சம்பெற்றுச் செய்பாகஞ் செய்ததினால் தீர்க்கமாமே.

தீர்க்கமா யைங்கோலஞ் செய்துமைந்தா செம்மையுடன் தானிருந்து இறவாய்நின்றால், மார்க்கமுடனெட்டெட்டு சித்துமாடும் மக்களே தேகம்வச்சிர காயமாகும், சேர்க்கையுடன் சிவயோகம் புதுமையாகுஞ் செகத்திலொரு பயமில்லை தீர்க்கவானாய், மூர்க்கமுள்ள முனியாவாய் ரிஷியுமாவாய் மூதண்டராஜரிஷி யாவாய்பாரே.

அமுதரசமெழுகு.

பாரப்பா அமுதரச கற்பஞ் சொல்வேன் பரமான ஆதியடா அண்டமண்டம், நேரப்பா ஆதிதனை யன்பாய்க்கண்டு தினேவாகப் பூரணத்தைப் பதிவாய்வாங்கி, வாரப்பா பீங்கானில் வைத்துக்கொண்டு வளமான ரவிமதியுங் கூடச்சேர்த்து, காரபபா ரவியில்நன்றாய்க் காயவைத்து கசடறவே காய்ந்தபின்பு மெழுகாய்ப்போமே.

மெழுகான பூரணந்தான் பூரணமேயானால் மேன்மையதாயதின்வளமை விள்ளக்கேளு, அழுகாத பிண்டமடா ஆதியாதி அன்பானபூரணமே தெய்வந்தெய்வம், பழுக்காதபொருள்களெல்லாம் பழுக்குமையா பரமான பூரணத்தின் பசுமையாலே, வழுக்காதுவாசியது முன்பின்றாக நாடிநின்ற நாடிதனை நாடிக்கேளே. 1096

சேனப்பா சிதம்பரத்தைத் தியானம்பண்ணிக் கிருபையுள்ள
மெழுகிருக்கு மேருதன்னை, நானப்பா நினைம்பார்த்து சக்கரத்தின்
மேலே விளைமேருவை யதின்மேல் வைத்து, கோளப்பா வா
ரமலர்ச்சனைகள் செய்து குருவான மூலமதில் மனதைவைத்து,
ஆளப்பா ரேசகபூரகமும்பண்ணி ஆதியென்ற கும்பகத்தி னருளைப்
போற்றே. 1097

போற்றியே பூரணத்தைப் பணிந்துகொண்டு பொருளானமெ
ழுகவிழ் பணவிடைதானெடுத்து, ஆற்றியே மனந்தேற்றிக் கொ
ண்டால்மைந்தா ஆகார தளர்ந்தசடம் இறுகிப்போகும், தேற்றியே
மண்டலந்தான் கொண்டாலய்யா தேகமென்ற கயிலாச தேகமா
கும், வாழ்த்திடே ஆண்டொன்றில் கெவுனமாகும் வரிசையுடனிர
ண்டாண்டு ஸித்திசித்தே 1098

சித்தியுடனஷ்டசித்துவ கைக்குள்ளாகுந் திறமாகும்வாசியது
சிதறாதையா, புத்தியுடன் மூன்றாண்டில் புருவத்தன்னில் புதுமை
வெகு அதிசயங்கள் தானேதோற்றும், பத்தியுடனைந்துநா லாண்
டால்மைந்தா பாய்ந்தகண்டம் போய்வாலாம் பதனமாக, முத்தி
பெற ஆண்டுபனிரண்டுகொண்டால் முத்தனென்ற கமலரிஷிக் கொ
ப்பாம்பாரே. 1099

## மும்மண்டலம்.

பாரப்பா மூலமுதலாறுவரை தாண்டி பண்பான மேல்வரை
யில் மண்டலந்தான்மூன்று, நேரப்பா முதலான மண்டலந்தான் சந்
திரன் நேராக அதின்மேலே சூரியமண்டலந்தான், காரப்பா அதின்
மேலே அக்கினிமண்டலந்தான் கருவாக இதையறிந்து சந்திரனில்
நின்று, சேரப்பா சூரியன்றன் மண்டலத்திலேறி செம்மையுடனக்
கினியின் மண்டலத்தைச்சேரே. 1100

சேரப்பா அக்கினியின் மண்டலத்தில் மைந்தா சேர்ந்துபாரப
ரத்திறுட தெரிசனையைப்பாரு, காரப்பா கருத்தறவே தெரிசனை
யைக்கண்டால் கயிலாசக் கொடிமுடியைக் காணலாகும், ஆரப்பா
அறிவார்கள் கொடிமுடி யின்போக்கு அம்பரமாய் நின்றதொரு
ஆதியாகி, பாரப்பா பதிகொண்டு ஆதியென்ற அண்டம் பாமகுரு
தன்னருளால் பிண்டமதைச்சேரே 1101

அண்டமென்று வாறிவார் மூகண்டப்போக்கு அப்பனே பக்
குவமாய் மன்பாய்ப்போற்றி, பிண்டமதின் தோடகற்றிக் கருவைவா
ங்கிப் பிசகாமல் சட்டியிற்குள் விட்டுமைந்தா, கண்டதொரு அமு
கியிலுற் கரைத்துக்கொள்ளு கருத்தறவே ரவிமுகத்தில் வைத்துப்
பாரு, விண்டிடவே ரவிமுகத்தில் கன்றுயக்காய்ந்தால் விரும்பியே
முன்போலே கரைத்துக்காய்ச்சே. 1102

காய்ச்சப்பா திட்சைமுப் பத்திரண்டு கைமுறையாய்ச் செய்து பின்பு கழறக்கேளு, ஆச்சப்பா அமுதமென்ற முப்பாலிட்டு அன் பாகக் கரைத்துநாவி முகத்தில்வைப்பாய், பேச்சப்பா முப்பாலின் மூன்றுதிட்சை பிலமாகச் செய்தபின்பு திருநீராக்க, பாச்சப்பா திருநீற்றைக் குப்பிக்குள்ளே பக்குவமாய்த் தானடைத்துப் பத னம்பண்ணே 1103

பண்ணப்பா நாற்பத்துமூன்றுகோணம் பக்குவமாய்த்தானே மூதி நடுக்கோணத்தில், நண்ணப்பா திருநீற்றின் குப்பிவைத்து நல மான மலராலர்ச் சனைகள்செய்து, கண்ணப்பா விந்தொளியைச் சம லதிபம் சுருத்துறவே கண்டுதரி சனத்தைப்போற்று, உண்ணப்பா திருநீற்றில் பணவிடைதானப்பா உண்டபின்பு குருபாதமுமாயிப் பாரே. 1104

ஊணிமிகப் பார்க்கையில் ரேசகமேபண்ணு உத்தமனே ரேச கத்தாற் கும்பகமேசெய்து, பேணியே கும்பகத்தில் மனதுறுதியா னால் பிறளாது வாசிசுழி முனையில்நிற்கும், காணியாய் நின்றதலங் கைவசமேயானால் காயாதியுறுதியடா நரைதிரைகளில்லை, ஆணியா யென்னாளும் யோகஞ்செய்தால் ஆண்டொரு நாழிகையா யமருந் தானே. 1105

தானென்ற திருநீற்றில் தயிலஞ்சேர்த்து தன்மையுடன் பிசை ந்துருட்டிப் பணவிடைதான்கொள்ள, ஊனென்ற தேகமசையாது கல்லாது உத்தமனே யென்னாளும் பசியுந்தோணு, தேனென்ற தற் பங்கா யாதியாகுஞ் சிந்தைமனதொன்றுமிக் கிருமுந்தொண்டார், கோனென்ற தேகமது தங்கநிறமாகுங் குருவான அமுதாகக் கற் பம்பாரே. 1106

## ஆதிபிண்டத்தயிலம்.

பாரப்பா ஆதியென்ற பிண்டம்வாங்கிப் பக்குவமா யதிலிருக் குங் கோரைநீக்கி, சேரப்பா கல்லுரலி லிட்டுமைந்தா சேர்த்துமிக த்தானிடித்துப் பாண்டத்திட்டு, வாரப்பா சுத்தசலம் பாண்டமதை மட்டும் வாராகக் கிண்டியதை அடுப்பிலேற்றி, காரப்பா தீமூட்டி பக்குவமாய்க் காய்ச்சு கருகாமற் பாகுபத மாகக்காய்ச்சே. 1107

பாகுபோல் காய்ச்சிநன்றாய் பதமாம்போதில் பண்பாகக் கடு குபோல் தயிலம்நிற்கும், வாகுடனே தயிலமதை வடித்துமைந்தா மகத்தானகுப்பிதனில் வைத்துப்போற்றி, தாமுடன் கடுகளவும் பதனம்பண்ணி தன்மையுட னிதின்விபரஞ் சாற்றக்கேளு, ஆசமுட னீசானம் பூசைசெய்து அன்பாகச் சற்குருவைப் பணிந்துநில்லே.

நில்லப்பா குருபதத்தில் நேர்ந்துகொண்டு நேசமுடன் பூசை பண்ணி உதயத்தன்னில், கொள்ளப்பா கடுகதிலேழிந்துகொண்டு கொண்டபின்பு மாலையிலே கூறக்கேளு, மெள்ளப்பா தயிலங்கா

சிடைதான்கொன்று மேன்புள்ள பூரணத்தி லறிவாய்நில்லு, தள்ளப்பா அறுசுவையைத் தள்ளிமைந்தா தயவாயோர் பொழுதுபாலன்னங்கொள்ளே. 1109

கொள்ளப்பா நாம்சொன்ன முறைதப்பாமல் கொண்டதினால் மேனிவச்சிர காயமாகும், மெள்ளப்பா மண்டலமே கொண்டுதீர்ந்தால் மேனியதுவாடாது வாலவயதாகும், செல்லப்பா கெவுனமதா யண்டவரைகற்றுஞ் செம்மையுட னிமைக்குமுன்னே யிருந்திடமுன் காணும், நில்லப்பா சுழிமுனையில் சிந்துவங்கென்று நிச்சயமாய் நின்றதினால் சித்துவகைகேளே. 1110

கேளப்பா சுழிமுனையில் நீபக்கேதாற்றுங் கிருபையுடன் நீப வொளி கண்டால்மைந்தா, வாளப்பா விளக்கதிலே நெய்யையூற்றி மைந்தனே திரிபோட்டு மனதையூணி, ஆளப்பா மனக்கண்ணால் திரியைப்பார்க்க அப்பனே திரிதானும் பற்றும்பாரு, கோளப்பா ஒன்றுமில்லை பூரணத்தினேர்மை கொண்டதினால் நினைத்தபடி கூடு மபாரே. 1111

பாரப்பா நினைத்தபடி யாடலாங்கேள் பக்குவமா மாதியந்தப் பதியினாலே, நேரப்பா நின்றபொருள் கண்டதாலே நினைவாக மன துறுதிக் கொண்டதாலே, வீரப்பா கொண்டதொரு லகிரியாலே விள்ளாத பூரணத்தின் செயல்தன்னாலே, சாரப்பாமதியமுதங் கொண்டதாலே சகலசித்துங் கைவசமாய்ச் சார்ந்துபோச்சே. 1112

## அஷ்டகன்மசிலை.

சார்ந்துபார் எட்டுவகை யோகத்துக்குஞ் சமரசமாய் வகையொன்று சொல்லக்கேளு, கூர்ந்துபா ருலகமதில் மதனப்பூண்டு கோடானகோடியுண்டு ஒருவர்காணார், தேர்ந்துகொண்டு சற்குருவினருளைப்போற்று திறமாக மதனப்பூண் டதனைவாங்கி, நேர்ந்துகொண்டு ஐந்தாய மதின்மேற்பூசி நினைவாக ரவிமுகத்திற் காயப்போடே. 1113

போட்டவுட னன்றாகக் காய்ந்ததானாற் புகழுடனே பத்துமுறை பூசிவாட்டு, நாட்டமுட னதிற்கசிவு கழன்றுபோகும் நன்மையுள்ள பூடதுவுந் துரும்புபோலாம், காட்டாதே யிப்பூவை யுலகத்தோர்க்குக் காட்டினால் குற்றம்வரும் கருவாய்ப்பாரு தாட்டிகமா யிதற்குப்பே ரென்னவென்றால் தயவான அஷ்டகன்மச் சிலையுமாச்சே. 1114

ஆமப்பா அஷ்டகன்மச் சிலையைநாட்டி அதிலிருந்து அஷ்டகர்ம முறைக்கேளு, ஓமப்பாவகைதுறையாய்ச் சொல்வேன்கேளு நலமான எட்டுவகை கன்மத்துக்கும், தாமப்பா நன்றாக விரித்துச் சொல்வேன் தவமான புலத்தியனே தயவாய்க்கேளு, காமப்பாமதி யகற்றி ரவியிற்சேரு கருவான ரவியறிந்தா லெல்லாஞ்சித்தே.

## ஸ்தம்பனம்.

இத்திக்குத் தம்பனமாம் வகையைக்கேளு சிவசிவா தேசசித்தி பண்ணிக்கொண்டு, மூத்திபெறஇந்திரன்றன் திசையைநோக்கி மூர்க்கமுள்ள ஆசனமாம்புலித்தோற்பட்டு, பத்தியுடனதிலிருந்து நீறு பூசிப் பதிவான பூரணத்தை மனதிநோக்கி, வெற்றிபெற ரேசகபூரகமும்பண்ணி வெகுநாத்த கும்பகத்தில் மேவிக்கேளே. 1116

சோப்பா மூலமதில் சேர்த்துகொண்டு சிக்கென்று கமலமதின் மகிமையாக்கி, காப்பா கமலிவாம வென்றுசொல்லி கருத்துறவே நூற்றெட்டு செபித்தாலமைந்தா, கூப்பா கண்டதெல்லாந் தம்பமேயாகும் கொடிதான மிருகமுடன் அஷ்டநாகம், சேப்பா சொன்னபடிகேட்குமல்ல சேர்மையுள்ள தம்பனத்தின்சேர்மைதானே.

தாவென்ற தாம்பூரத் தகடுதன்னில் தயவாக நமசிவய வென்றேமைந்தா, தேவென்ற கருப்பூசிந் தகடுதன்னை செம்மையுடன் மானிடர்க்குக் கட்டுவாக்கால், ஊனென்ற தேகமதில் நோய்களெல்லாம் ஒடுங்கியே தப்பித்துஓடிப்போகும், மானென்ற லோகத்திலவனைக்கண்டால் மனதடங்கி தம்பித்து வாசமாவாரே. 1118

## மோகனம்.

வாரப்பா தம்பனத்தைச் சொன்னேனமைந்தா வரிசையுள்ள மோகனத்தின் வளமைகேளு, தேரப்பா மனதடங்கி தேகசுத்தி செம்மையுடன் செய்துகொண்டு நீறுபூசி, காரப்பா கலைத்தோலாசனத்திலமைந்தா கமமெனவே அக்கினியின் திசைநோக்க, பாரப்பா மனம்பதிய இருந்துக்கொண்டு பக்குவமாய் மினுமணிக் கையில்வாங்கே. 1119

வாங்கியே மூலமதில் மனதைவைத்து வரிசையுடன் ரேசகபூரகமும்பண்ணி, தாங்கியே கும்பகத்தில் நின்றுகொண்டு தயவாகச் சிவயநம வென்றுவோது, பாங்குபெற நூற்றெட்டு வோதிருக்கால் பாரிலுள்ள மானிடர்க ளதிமோகமாவார், பூங்கமலத் திருமாது அகலாதப்பா புண்ணியனே பகலிந்து மோகமாமே 1120

ஆமப்பா அரியதுறல் தகடுசெய்து அப்பனே சிவாயநமவென்றுதாக்கு, நாமப்பா கருப்பூசி உகைத்தோர்க்கு நன்மையுடன் கட்டினதால் நாட்டிலோர்கள் தாமப்பா மோகனமாய் தன்மையாகுஞ் சுதாநந்தி யகலாது சாந்தமாவார், நாமப்பா மோகசுகன் வியர்கள் வந்தால் கால்பிடித்து மாதாவே யென்றுபோற்றே 1121

## வசியம்.

போற்றியே மோகத்தைச் சொன்னேன் மைந்தா புதுமையுள்ள வசியமதை புகலக்கேளு, தேற்றியே மனதறிவால் தேகசுத்தி செய்மையுடன் செய்துநீ யுத்தளமாய்ப்பூசி, வாற்றியே பங்கயாசனத்தைப்போட்டு வடகிழக்கு முகமாக இருந்துக்கொண்டு, சாற்றுவாய் பூரணத்தில் மனதுதன்றாய் சாற்றியே ரேசகபூரகமும் பண்ணே. 1122

பண்ணப்பா கும்பகத்தில் நின்றுகொண்டு பக்குவமாய் ருத்திராட்சமாலையில்வாங்கி, விண்ணப்பா நாமேனுக்கி நயமவசியென்று விருப்பியேநூற்றெட்டு செபித்தால் மைந்தா, நண்ணப்பா வுன்னையவன் கண்டாலுந்தான் நாடியே வசியமதாய் வணங்கிநிற்பார், எண்ணப்பா வுலகமதில் சீவசெந்து உண்டான வஸ்துவெல்லாம் வசியமாமே. 1123

வசியமாய்க் காரியந் தகடுசெய்து வளமாக நயமவசி யென்றுமாறி, உசிதமதாய்க் கருத்தொட்டுத் தடவிநன்றாய் உண்மையுள்ள மாந்தருக்குச் சட்டினுக்கால், பசிதாக மானதுபோ யுனைக்கண்டோர்கள் பணிவார்கள் வசியமதாய் பண்பாய்மைந்தா, நிசிதமுள்ள மிருகதாபரசங்கங்கள் நேர்மையுடன் வசியமதாய் வணங்கும் பாரே. 1124

## மாரணம்.

பாரப்பா வசியமொன்று நன்றாய்ச் சொன்னோம் பக்குவமாய் மாரணத்தைப் பகரக்கேளு, நேரப்பா தேகசுத்தி நன்றாய்ச்செய்து தினைவாக வுத்தளமாய் நீறுபூசி, காரப்பா அத்தியாசனத்தைப் போட்டு கருத்துறவே தென்முகமா யிருந்துமைந்தா, சேரப்பா கும்பகத்தில் மனத்தைநாட்டிச் செம்மையுடன்ரேசகபூரகமும்பண்ணே.

பண்ணியே கும்பகத்தால் பணிந்துகொண்டு பக்குவமாய் அளசியமணிக் கையில்வாங்கி, நண்ணியே சுழிமுனையில் நாட்டமுற்றுநமசிவய நூற்றெட்டு வுருத்தானேத, உண்ணியே யுனக்குவினை செய்தோரெல்லாம் உத்தமனே மாரணித்து ஒடுங்கிப் போவார், தன்னிமையாய் மாரணந்தா னதிகமாகுந் தரணிதனி லுனக்குவினை செய்தால்பாரே. 1126

பாரப்பா வெள்ளியினால் தகடுதட்டிப் பக்குவமாய் நசிமயவஎன்றுமாறி, நேரப்பா கருத்தொட்டுதகட்டிற்பூசி செடிதான நேயோர்க்குக் கட்டினுக்கால், மாரப்பா நோய்களெல்லா மாரணித்து

ப்போகும் வஞ்சகருஞ் சத்ருருவும் வசையுள்ளோரும், வேரப்பா அற்றமரம் போலேபோவார் மெய்யான மாரணத்தை விரும்பிச் செய்யே. 1127

## உச்சாடனம்.

செய்யப்பாமாரணத்தின் விபரஞ்சொன்னேன் திறமாகவுச்சாடனஞ் செப்பக்கேளு, மெய்யப்பா தேகசுத்தி நன்றாய்ச் செய்து விரும்பியே முக்களமாய் மெய்யிற்பூசி, கையப்பா மான்றோலி லாசனத்தைக் கருத்தறிந்தே இருந்திமுகங் காத்துமைந்தா, பையப்பா மூலமுதல் மனதையொட்டி பாங்காக ரேசகபூரகமும்பண்ணே. 1128

பண்ணப்பா கும்பகத்திற் பதியநின்று பத்தியுடன் துளசிமணிக் கையில்வாங்கி, விண்ணப்பா தானேக்கி மசிவயநவென்று விரும்பியே நூற்றெட்டு செபித்தால்மைந்தா, கண்ணப்பா நினைத்ததொரு பொருள்சாதிக்கும் கலமில்லா மாந்தனாயு மாணமே செய்யும், உண்ணப்பா நீறுதொட்டுத் தெறித்தாயாகில் உறுதியுள்ள வியாதியெல்லா மாரணித்துப்போமே. 1129

போமப்பா வெள்ளியத் தகடுசெய்து புத்தியுடன் மசிவயநவென்றுமாறி, ஆமப்பா கருத்தொட்டு அழித்துப்பூசி அருகநோய்க் குநக்கு அவிழ்த்தாயானால், தாமப்பா நோய்களெல்லாம் உச்சாடிக்குந் தன்மையுடன் கண்டதெல்லாம் உச்சாடிக்கும், நாமப்பா சகுவித்தை அதிசயித்தை நாட்டினேம் பன்னிரண்டு நூற்றிற்றானே.

## ஆகருஷ்ணம்.

தானப்பாவுச்சாடனத்தைச்சொன்னேனையா தயவாக ஆகருஷ்ணத்தைக்கேளு, பேணப்பா தேகசுத்திசெய்துகொண்டு பலத்தபுத்தி யறிவதினால் நீறுபூசி, நாணப்பா மேற்குமுக மிருந்துகொண்டு தயவாக தெர்ப்பையாசனத்திலமைந்து, வாணப்பா தானேக்கித் திசைப்போற்றி மனதாக ரேசகபூரகமுஞ்செய்யே. 1131

செய்யப்பா கும்பகத்தி லறிவாய்நின்று செயமான சங்குமணி கையில்வாங்கி, மையப்பா நசிமயவவென்றுசொல்லி பதறும நூற்றெட்டு செபித்தால்மைந்தா, மெய்யப்பா நினைத்தவன்னா மாகருஷ்ணமாகும் மேலானவித்தையிலே யதிசயித்தை, கையப்பா வுதவுவது போலமைந்தா காட்டினே மாகருஷ்ணத்தைக் கருத்தாய்ப்பாரே.

பாரப்பா குடவணிலே தகடுதட்டிப் பத்தியுடன் சிமயவவென்றுமாறி, நேரப்பா கருத்தொட்டு நன்றாய்ப்பூசி நேர்மையுடன்

மாணிடர்க்குக் கட்டிடுக்கால், ஆமப்பா அறிவார் ஆகருஷணத்தின் போக்கு அம்பாதனை யறிந்தவர்க ளறிவாரையா, தேப்பா மனை தன்றாய்த் தேர்ந்துகொண்டு தேறியபின் அஷ்டகன்மச் செய லப்பாகேள். 1133

## வித்வேஷணம்.

பாரப்பா ஆகருஷணத்தைச் சொன்னேன் பத்தியுடன் வித் வேஷணத்தைப் பகரக்கேளு, காரப்பா காலுறங்கள் சுத்திபண் ணிக் கம்மெனவே திருநீறுந் தளமாய்ப்பூசி, ஆமப்பா அறிவார்கள் ஆசனத்தின்பலனை அப்பனே வடமேற்கு வாய்வைப்பற்றி, தேப் பா மேல்மூலப்பதியில்நின்று, செம்மையுட னெட்டிமணிக் கையில் வாங்கே. 1134

வாங்கிக்கொண்டு ரேசகபூரகமும்பண்ணி வரிசையுடன் கும்பக த்தில் மனத்தைத்தைத்து, பாங்குபெற மயவசி யென்றுமாறிப்பத் தியுட னூற்றெட்டு செபித்தால்மைந்தா, தாங்கியே வித்தெடுத்து பூமியிலாணி தன்மையுட னீர்வார்க்க க்ஷணத்திலைமந்தா, வீங்கதி கொண்டேவளர்ந்து காய்க்குமப்பா வித்வேஷணத்திலுட நுண் மைதானே. 1135

தானென்ற குருத்தோலை தழுக்கிலைமந்தா தயவாக மயவசி யென்றுமாறி, ஊனென்ற கருத்தொட்டுக் கடலினைமைந்தா உறுதியு டன் மாணிடர்க்குக் கட்டிடுக்கால், வீணென்ற பிரமையெல்லாந் தீருந்திடும் விதமான பில்லிவஞ் சனைகள்தீரும், தேனென்ற தேக மது செம்மையாகுஞ் சிவசிவா வித்வேஷணத்தின் திறந்தான்பாரே.

## பேதனம்.

பாரப்பா வித்வேஷணத்தைச்சொன்னேன் பண்பான பேத னத்தைப் பகரக்கேளு, தேப்பா மனைதன்றாய்ச் சுத்திபண்ணிச் சிவசிவா வென்றுதிருநீறுபூசி, சேப்பா ஆசனந்தான் தேவதாரு செம்மையுடனே குபேரனுட திசையைநோக்கி, காரப்பாகருவிளையின் மேல் கருத்தைவைத்துக் கருவான முத்துமணிக் கையில்வாங்கே.

வாங்கிமனதொன்றாகி யவமசியென்று வரிசையுடனூற்றெட்டு வாமபோதச், சாங்கமாய்க் கண்டதெல்லாம் பேதமேயாகுஞ் சமரசமா யெடுத்ததெல்லாம் பேதனமேயாகும், பாங்குபெற பேத னத்தின் வகைசெய்தாக்கால் பாரிலுள்ளோர் குணமுபதம் பணிவா ரப்பா, ஆங்கவனே ஆக்கதுகொண்டெட்டுமெத்தாம் அகார மனத ட்கி அறியச்செய்யே. 1139

செய்யப்பா இரும்பினால் தகடுசெய்து நீர்க்குடன் மெலகிம
ளக்குமாறி, மெய்யப்பா கருக்கொட்டித் தடவிமைந்தா மேதினி
யில் மானிடர்க்குக் கட்டுறுக்கால் வையப்பா தேய்கள பேதனமா
ய்ப்போகும், பார்தனிலே ஒருவருக்கும்பகரவேண்டா, மையப்பா
பூரணத்தின் கருவிதுலே மார்க்கமுட னெட்டுவகை சித்தும்பாரே.

பாரப்பா அஷ்டகன்ம மெட்டுஞ்சொன்னேன் பதிவானதசதி
ட்சை பெற்றோர்க்காமே, நேரப்பா தசதீட்சை சும்மா ஆமோ நேர்
மையுடன் மனதுறிமை யானால்மைந்தா, காரப்பா மனதுறிமை வது
வைக்கண்டு கருணையுடன் காட்டுவிப்பார் தசமாந்தீட்சை ஆரப்பா
யாராலுந் தசதீட்சை பெற்றோர் அவரிடமா யஷ்டசித்து மாடுந்
தானே. 1141

தானென்ற அகப்போக்கித் தான்தானாகித் தன்மையுடன்குரு
பதத்திற் சார்ந்துகொண்டு, ஊனென்ற காயாதி கற்பங்கொண்டு
ஒருமையுடன் பூரணத்தி லொடுங்கிமைந்தா, தேனென்ற மதியமு
தங் கொண்டால் மைந்தா செம்மையுடன் சடலமது வலுத்துப்
போச்சு, நானென்ற ஆணவங்க ளற்றுகல்ல நலமான காலதுவுமச
ந்துபோச்சே. 1142

போச்சப்பா பூரணத்தை மறந்தாக்கித்து பொய்யாகுமெய்
துஞ்சேமல் குற்றமில்லை, பாச்சப்பா பூரணந்தான் மதியமுதமாகும்
பாமான சதிமோட்ச மதுவேயாகும், ஆச்சப்பா வாசிதனக் குயிரு
மாகும் அருளாகும் பொருளாகு மகாரணமும், பேச்சப்பா தொ
னித்தொரு சத்தமாகும் பேசாத சத்தமடா சத்தசிவமாச்சே.

ஆச்சப்பா சத்தசிவஞ் சத்திசிவமாச்சு அப்பனே சத்திசிவ
மறிந்துக்கொண்டு, பாச்சப்பா காலசிவம் மாலசத்தி பக்குவமாய்
நேர்மையுடன் பூசைபண்ண, மூச்சப்பா வோடாது முன்பின்றாச
மூலைகண்டால் கைலாச முடிவுங்காணும், காச்சப்பா மவுனத்தி
லமுதமுண்ணு கற்பூர தீபமதைக் கண்ணாப்பாரே. 1141

கண்ணான கண்ணாறிந்து கனலைத்தூண்டிக் காலறிந்து யோக
மதால் கருத்தாய்நின்றால், விண்ணான அமுதமது அருவியாயும் வின்
னாதேதமதியமுத மவுனமாகும், சொன்னாலுந் தெரியாது மவுனப்
போக்கு தொட்டுமிகக் காட்டினதால் தேனாந்தேனாம், பொன்
னான கமலமடா பிரமமாச்சு பொற்கமலமானதொரு அண்டமாமே.

அண்டமுடன் பிண்டமதைப்பார் தான்காண்பார் அரகரா அண்
டபிண்டமாதியந்தம், விண்டாலு மாதியந்த மறியப்போமோ விள்
ளுகிறேன் புலத்தியனே னன்றாய்க்கேளு, கண்டாலுங் காணாத
விந்து கருவாகச் சொல்லுகிறேன் கால்தலையுமாச்சு, வுண்டானகால்

தலையில் மனவின்னாச்ச வுறுதியுள்ள மனவின்னுஞ் சத்திசிவமாச்சே. 1146

## சத்திசிவம்.

சத்தியென்ற சத்திதனை யார்தான் கண்டார் தவமானசிவமதனையறியமாட்டார், புத்தியுடன் வொன்றையுந்தான் சொல்லக்கேளு புதுமையுள்ள சத்திசிவம் ரவிமதியுமாச்சு, பத்தியுள்ள ரவிமதிதான் காரசாரம் பாங்கான காரமடா ரவியுமாச்சு, வெற்றியுள்ள மதியதுவுஞ் சாரமாச்சு வேதாந்த தத்துவமுமிதுவேயாச்சே. 1147

ஆச்சப்பா ரவிமதியி லாண்மைகேளு அப்பனேகுருவினாற் செய்யுமார்க்கம், இச்சப்பாமதிதனிலேமதியாய்நின்று நினைவுதடுமாறியலர் ரவியைக்காணார், பேச்சப்பா ரவிகாணா மாந்தர்தானும் பிறந்திறந்துமாள்வார்கள் பேயைப்போலே, பாச்சப்பா இடைகலையை ரவியிற்சேரு பக்குவமாய்ச் சேர்ந்தினாற் பாலனாமே. 1148

பாலறிந்து பால்பொசிந்துப் பதியில்நின்றால் பக்குவமாய்த் தமர்வாசற்பூட்டுத்தோணுங், காலறிந்து கால்பிடித்து வாசிபூட்டி கலங்காமல் நின்றதினால் கால்தான்சென்று, மேலான தமர்வாசற் பூட்டைமைந்தா விசைபாக திறக்குமடாவாசிசென்று, சேலான தமர்வாசல் திறந்தால்மைந்தா செம்மையுடன் பூரணம்நால்காணலாமே.

காணலாம் பரப்பிரமக் கபாலந்தன்னைக் கருவான கபாலமடா கயிலாசமாச்சு, பேணலாங் கயிலாசமேரிச்சென்று பிலத்தபுத்தியறிவாலமூர்தங்கொண்டு, பூணலாம் பூரணத்தி லமுர்தங்கொண்டால் போதையென்ன சதாபோதை புகழ்ந்துகோணுந், தோணலாமப்போதை தன்னில்நின்று துலங்கலா மஞ்சவகைநிஷ்டைகேளே.

கேளப்பா ஆதியிலேமேருபூசை கெணிதமுடன் செய்ததினால் பொதிகைமுனியானேன், நாளப்பா ஆண்டொன்றி லகத்தியனுமானேன் நலமான மேரினுட அமுர்தங்கொண்டேன், காலப்பா விசையறிந்து கயிலைதனிற் சென்றே கலங்காமல் காயாதிகற்பங் கொண்டேன், ஆளப்பா அதினாலே கும்பமுனியானேன் அகாரமேரினுட ஆண்மைதானே. 1151

## மேருபூசை.

பாரப்பா மேரினுட பூசைசொல்வேன் பத்தியுடன் புலத்தியனே நன்றாய்க்கேளு, காரப்பா சாணகலஞ் சாண்தானீளங் கருவாரச்சந்தனத்தின் கட்டைவாங்கி, சேரப்பா பலகைநன்றாய் சேர்த்

துக்கொண்டு திறமாகக் கால்நாலுங் கடைச்சல்போட்டு, கோப்பா பலகைநீ மெதுவாய்ப்பண்ணி நேர்மையுள்ள பூசையுளமுறையைக் கேளே. 1152

கேளப்பா தேசசுத்தி பண்ணிக்கொண்டு கிருபையுட னுத்தமமாய்நீறுபூசி, வாளப்பா பலகையின்மே னீறுசாத்தி வங்கென்று தான்பார்த்து வளமேசெய்து, கேளப்பாகரியாசஞ் செய்துக்கொண்டு செம்மையுடன் வடமாலைச் சிறப்பாய்ச்சாத்தி, சேளப்பா மந்திரத்தை யுச்சரித்து கூர்மையுட னருச்சனைக்கும் மலர்தான்கொய்யே 1153

கொய்துமெள்ள அருச்சனைகள் செய்துநீயுங் கூர்மையுடன் மனம்பதிய வறிவில்நின்று, வுய்தமுடன் தாம்பூலம் பால்பழங்கள் வைத்து வுண்மையுடன் தேங்காய்தா னுடைத்துப்பரப்பி, சைதன்னியமாகவே நீபுடைத்துப்பாத்தி தண்மையுடன் ரேசகபூரகமும் பண்ணி, தெய்தமுள்ள கும்பகத்தில் பராபரத்தைநோக்கி சுத்தசிவயோக பிராணாயாமம்பண்ணே. 1154

## பிரமநிஷ்டை.

பண்ணியபின் பிர்மநிஷ்டை தன்னைக்கேளு பதிவாகச் செம்மையுடனிருந்துக்கொண்டு, புண்ணியனை விந்துமுத் திரையேசெய்து பூரணமாய் ரேசகபூ ரணமும்பண்ணி, சண்ணிகமாய் கும்பகத்தில் சார்ந்துக்கொண்டு சமாசமாய் மாதாவைப்பூசைபண்ணி, நண்ணியே பிராணாயம் பண்ணிக்கொண்டு நலமான திருநீற்றைப் பூசவாயே. 1155

பூசியேதிருநீற்றுப் பணிவிடைதான்கொள்ள புதுமையுள்ளமாதுஅகலா துமைந்தா, நேசமுடன் ஆண்டொன்றிற்பூசைபண்ணி, நேர்மையுடன் கொண்டதினால் தேகஞ்சித்தி, வாசமுள மலரொளியில் மனமதனைவைத்து மனதாகப்பூரணத்தை மைந்தாமைந்தா, பாசமுடன்பதிந்து பூரணத்தைநோக்க பரப்பிர்ம மானதொரு தேகமாச்சே. 1156

## விஷ்ணுநிஷ்டை.

ஆச்சப்பா பிர்மநிஷ்டை சொன்னேன்மைந்தா அன்பான விஷ்ணுவுட நிஷ்டைகேளு, பேச்சப்பா சுகாசனமா யிருந்துக்கொண்டு பேணியே யிடதுகால் வலதுகால்மேல், பாச்சப்பா விந்துமுத் திரையைச்செய்து பதிவாக வும்மனவே நியமம்பண்ணி, மூச்சப்

கொண்டு ஓங்கார சத்திசிவ மென்றுசாத்தி, புண்ணியனே வடமாலைப்பால் பழங்கள்வைத்துப் புனிதமுடன் தேங்காய்தாம்பூலஞ் சாத்தி, தன்னிமையாய் தூபதீபங் கள்காட்டி சமாசமாய் ரேசகபூரகமும்பண்ணே. 1163

பண்ணுவது கும்பகத்திற் பதிவாய்நின்று பரமகுருமாதாவைப்பணிந்துகொண்டு, உன்னுவாய் ஓம்ஸ்ரீம் சிவாயவென்று உத்தமனே தோத்திரத்தை நன்றாய்ச்செய்து, கண்ணுமேற் புருவமதில் கனலைத்தாண்டிக் கப்பூர தீபமதைக் கருத்தாய்ச்சேவி, மண்ணுலகில் தன்னில்வெகு கீர்த்தியாகி வளருமடா அஷ்டசவு பாக்கியந்தானே. 1164

தானென்ற சக்கரத்தி னீறுபூசி தயவாகப் பணிவிடைதானுட்கொண்டாக்கால், வானென்ற ருத்திரியாள் கேட்டவரமெல்லாம் வரிசையுடன் தானீவாள் மைந்தாமைந்தா, தேனென்ற தேகமதுனடுத்தால்மைந்தா சிவசத்தி பூசையைநீ செய்யவேணும், ஊனென்றதேகத்துக் குறுதியென்ன வுத்தமனே சத்திசிவ பூசைதானே.

சத்திசிவ பூசையென்று சொர்தான்காண்பார் தயவான மேருவல்லோ சத்திசிவமாச்சு, முத்திகொண்ட சத்திசிவ மென்னவென்றால் மூற்கமுளநாற்பத்து முக்கோணமொன்று, பத்திகொண்ட சிதம்பர சக்கரந்தானென்று பார்மகனே யிதினுடைய பரிசுகேளு, பத்தியுடனாற்பத்து மூன்றுக்குந்தான் பூரணமாநின்ற சிதம்பரமதாச்சே. 1166

ஆச்சப்பா சத்திக்கு சிவன்தான்கண்ணு அன்பான சிவத்துக்காதாரங்கேளு, பேச்சப்பா வொன்றுமில்லை சத்தியுடனே சம்பிலமான தேசமென்ன வென்றால்மைந்தா, மூச்சப்பா வொடுங்கிநின்ற நாதநாதம் மூர்க்கமுள்ள நாதமுக்கோணமப்பா, பாச்சப்பா முக்கோணந் தன்னிலேதான் பதமான சிதம்பரமாம் விந்தையாச்சே.

பாச்சப்பா விந்துவிடு தைஞ்சோப் பதிவான பாதத்துக்கு வுயிருமாச்சு, நீச்சப்பா வுயிரறிந்து வுயிர்ச்சேர்ந்தால் நிசமான வாலையது நிர்த்தஞ்செய்வாள், ஆச்சப்பா வாலையவள் நிர்த்தஞ் செய்தால் அப்பனே வாசியது அசைவதையா, பேச்சப்பா ஜோதித்ததொரு வாசிநின்றால் பிசாது காயசித்தி அனைவோர்க்குமாமே.

## மகேசுரநிஷ்டை.

ஆமப்பா ருத்திரநிஷ்டை சொன்னேன்மைந்தா அகாரமெய சத்தி நிட்டைகேளு, தாமப்பா இல்லறத்தைத் சத்திபண்ணி தம்

பனத்தால் திருநீறுந் தனமாய்ப்பூசி, நாமப்பா சொல்லுகிறோம்
பிராணயத்தை நழுவாமல் மனதாமிமை யாகச்செய்து, சேமப்பா
செம்பென்ற பலகைதன்னில் செம்மையுடன் திருநீற்றைப் பரத்திக்
கேளே. 1169

கேளப்பாமேருசக்கரத்தைநன்றாய்க் கெணிதமுட னிதானித்து
க்கிருபைகூர்ந்து, ஆளப்பா மலராலர்ச் சனைகள்செய்து அன்பாக
வடமாலை அனம்படைத்து வாளப்பாபால்பழந் தாம்பூலம்வைத்து
வரிசையாய்த் தேங்கா யுடைத்துவைத்து, நீளப்பா தூபமுடன் தீப
ங்காட்டி நிச்சயமாய்த் தோத்திரத்தை நினைவாய்செய்யே.

செய்யப்பா செம்மையுட னிருந்துக்கொண்டு திறமாக வலது
கா லாசனத்தாக்கி, வையப்பா இடதுமுழங் கையில்வைத்து பன்
பாக ரேசகபூ ரகமும்பண்ணி, மெய்யப்பா கும்பகத்தில் அங்கென்
றூட்டி மேலான நிபமதை நோக்கிமைந்தா, வையப்பா வாசியை
நீ நிபந்தன்னில் வைத்ததிற லதினுடைய மகிமைகேளே.

மகிமையென்ன மகேஸ்பரியாள் நிர்த்தஞ்செய்வாள் மனதுக
ந்து கேட்டதெல்லாம் வளமாயீவாள், உகமையில்லாப் பூரணத்தை
யூட்டிவைப்பாள் உண்மையுடன் தன்மையா யுதவிசெய்வாள், அக
மவளாரும் பொருள்வளரு மாயிபூசை அன்புடனே செய்தபின்பு
ஐயாகேளு, சுகம்வளருஞ் சக்கரத்தின் விபூதிதன்னை சுத்தமுடன்
தானெடுத்து வைத்துப்போற்றே. 1172

போற்றிநன்றாய் மெய்க்கனிந்து வுட்கொண்டாக்கால் பூலோ
கமன்னரெல்லா வசியமாவார், பார்த்திபனே சகலசித்துங் கைக்கு
ள்ளாகும் பரமான கையிலாச தேகமாகும், சாற்றியதோர் சகல
கலைக் ஞானந்தோற்றுந் தயவாக மதியமுர்தங்கசிந்தூறும், ஆத்
தியே மனந்தேற்றி அருட்பாலிவாள் ஆகார மேரிறுட ஆண்மை
தானே. 1173

## சதாசிவ நிஷ்டை.

தானென்ற மயேசுரத்தி னிஷ்டை சொன்னேன் சதாசிவத்தி
னிஷ்டைதனை சாற்றக்கேளு, ஊனென்ற தேகமதைச்சுத்திபண்ணி
உத்தளமாய் நீறிணிந்து வுண்மைபோற்றி, நானென்ற அகம்போ
க்கி நீதானென்று நன்மையுடன் ஒட்டியாணம் பெந்தம் பண்ணி,
கோனென்ற குருபதத்தில் மனதைவைத்து கூர்மையுடன் பிராண
யன் றுணமாய்ச்செய்யே. 1174

குணமாகச் செய்தபின்பு பலகைமீதில் கும்மெனவே நிறைத்
துக் குறித்துமைந்தா, மணதாக மேருவைநீ தானித் தப்பாவரிசை
யுட னாசனத்தின் மேலேவைத்து, தனதாக மலரெடுத்தர்ச்சனையே
செய்து தன்மையுடன் கும்பமொன்று தயவாய்வைத்து, கனமான
கும்பகத்துக் காடைசாத்தி கருத்துறவே தேங்காய்வைத்தர்ச்சனை
நீசெய்யே. 1175

செய்யப்பா அர்ச்சனைகள் செய்தபின்பு சிறப்பாக வடமாலை
நன்றாய்ச்சாத்தி, வையப்பா ரசவர்க்கம் கனிவர்க்கங்கள் வளமான
பரமானந் தாம்பூலங்கள், மெய்யப்பா தேங்காய்க ளுடைத்துவை
த்து, விரும்பியே தீபமொடு தூபங்காட்டி, கையப்பா தான்கூப்பி
தோத்திரமேசெய்து கண்மூக்கு நெற்றியிலே சதாசிவத்தை நோ
க்கே. 1176

நோக்கியே வாசிதனை அம்மென்றேற்றி நன்மையுடன் ரேச
கபூரகமும்பண்ணி, தாக்கியே கும்பகத்தில் சதகமென்று தன்மை
யுடன் தானிறுத்தி பூரணத்தைநோக்கி, வாக்குமன மொன்றாக வா
சமலர்தூவி மகத்தான தீபவொளி யதனைக்கண்டால், நாக்குதனி
நடுமூக்கு நாசிதனில்நின்றால் நலமான மனோன்மணியி னாட்டமதை
க்காணே. 1177

நாட்டமதைக் கண்டவுடன் தாயேயென்று நன்மையுட னொரு
மனதாய் நயந்தாயாகில், கேட்டவரந் தானீவாள் கிலேசமில்லை கே
சரத்தின் கேசரியாள் கிருபையாகும், வாட்டமிலா மனோன்மணி
தா னருட்பாலீவாள் வரிசையுடன் கொண்டிடவே சித்தியாகும்,
தேட்டமுடன் சக்கரத்தினீறுதன்னை செம்மையுடன் தானிட்டுக்
கொள்வாயே. 1178

வாயார மந்திரத்தை வழுத்தவேணும மனந்தேர்ந்து பூசையி
லே நினைக்கவேண்டும், நேயமுடன் செபதபங்கள் செய்யவேணும்
நிலைமையுள்ள தமைதனைக்காணவேணும், தாயகமாய் பூரணத்தைச்
சாதித்தேதான் சதாசித்தம் சந்நிதியிற் சாரவேணும், காயமுந்து
க்கனிபொசித்து நிலைக்கவேணும் கற்பமதை யுண்டுசித்தங் காணு
காணே. 1179

காணுகிற கண்ணறிந்து காணுகாணு கருவானகண்ணதுதான்
மனக்கண்ணாச்சு, ஊணுகிற கண்ணறிந்து ஊணுஊணு வுறுதியுள்ள
வாசியினுலூணிப்பாரு, தேணுகிற பொருளேது சுடரொளிதான்
மைந்தா சுடரானவொளியதுதான் பரமவொளியாகும், பேணுகிற
வொளியேது ஐயாஐயா விலமான கற்பூர வொளியைப்பாரே.

காருந்திரா மருட்பாலீவார், வாளப்பா கேட்டதெல்லாம் வரிசையாக வரிசையுடன் தான்கொடுப்பார் மைந்தாமைந்தா, நாளப்பா நாளுக்குநாளேமைந்தா நயந்தாமிகவளருமடா பாக்கியந்தானே.

## விசுத்தி.

தானென்ற விசுத்தியுட நேர்மைகேளு தயவாகவக்கென்றுவாசிபூட்டி, நேனென்ற ரூபத்தில் நிறமைந்தினால் சிவசிவாமயேஸ்பாறுங்கருணைகூர்ந்து, ஆனென்றமதியமுர்தமீவார்பாரு வகைத்தமிகக் கேட்டதெல்லாம் ஒருமையாகத், தேனென்ற குருவருளாலிந்துமைந்தா குவலயத்தில ராஜரிஷியாவாய்பாரே. 1187

## ஆக்கினை.

பாரப்பா சதாசிவத்தின் பெருமைகேளு பண்பாகயங்கென்றுவாசிபூட்டி, நேரப்பா பூரணத்தை நோக்கிநின்றால் நேர்மையுள்ள சதாசிவனும் நித்தஞ்செய்வார், காரப்பா அவர்பதத்தைப் பூசைபண்ண கருணையிலேமதியமுர்தங் கடாட்சிப்பார்கள், ஆப்பாவுனக்கினி சொல்லப்போறேன் அப்பனே செவுஜுசித்துமாமே. 1188

## மதிநேர்மை.

இந்தனமதியினுட நேர்மைகேளு திறமாக அம்மென்று வாசிபூட்டி, மூத்தானைபதிநோக்கி நின்றால்மைந்தா மூதண்டகோடிமதி கலாந்திகாளும், வற்றாத மதியமுர்த மருவியாயு மகத்தான அமுர்தமதை மகிழ்ந்துகொண்டால், வித்தான தேகமதாக் கழிவேயில்லை வேதாந்த குருவெனவே விளங்குவாயே. 1189

விளங்கவே மவியினுட காந்திசொல்வேன் வேகமுடன் உம்மெனவே விரும்பிச்சொல்லு, கலங்காமல்லாவீகோடிகாந்திகளுங் கண்மூக்கு மத்தியிலே காந்திகளும், உளங்கனிய பூரணத்தைத் தெரமூஷபோறுபி உறுதியுடன் நிறைந்திருல் மைந்தாகேளு, தலங்குமடாவுன்தேகமதி போல்மைந்தா தாண்டாத மணிவிளக்கின் சோதியாமே 1190

## அக்கினிநேர்மை.

சோதியென்ற அக்கினியாமவனைவிடு சொல்லிநது சொல்லுகிறேனுனைக்காய்மைந்தா, ஆதியென்ற ஆதியடா அங்அம்மென்று

அப்பனே ரேசகபூ ரகமும்பண்ணே, நீதியுடன் கும்பகத்தில் வாசி பூட்டி நின்றதினா லக்கினியின் பிரமைசொல்லப், பாதிமதியணிந்த சிவன் தன்னால்கூட்டி பரமவொளி யொளியெனவே பகரலாமே.

ஆமப்பா பகாறியா மோட்சவீடு அருளான அருள்பெருகுமா திவீடு, காமப்பால் கானற்பால் சொலிக்கும்வீடு கற்பூர தீபமதாகா றும்வீடு, நாமப்பா மதியகத்தின் மாலின்வீடு நல்வினையுந் தீவினை யும் நாடும்வீடு, சோமப்பால் சொலிக்கும் பூரணத்தின்வீடு சொல் லாத சூட்சமடா மவுனவீடே. 1192

மவுனமென்ற வீடறிந்து மதியைத்தள்ளி மகத்தான ரவிபெ ருகி ஒளியில்நின்றால், கெவுனமென்ற கெவுனமது கைக்குள்ளாகும் கேண்மகனே பூரணமும் உன்வசமேயாகும், நவிலவொண்ணாப் பூர ணத்தைக் காடிறுக்கால் நரசென்ம மில்லையடா நாயன்நாயன, பல மூல மானகுரு பாதம்போற்றி பத்தியுட னுயிரத்தெட் டிதனைப் போற்றே. 1139

போற்றுவது என்னவென்றால் மைந்தாகேளு பூரணமா மவு னமதைப் போற்றிக்கொண்டு, தேற்றுவது மனந்தேற்றி பூரணத் தைத்கொண்டு செம்மையுடன் மனந்தேற்றிச் செம்மையாகி, காத் துமனக் கருணையிலே கருத்தாய்ப்பூட்டிக் கருத்தாகப்பணிவொண்டு றாறைமைந்தா, பார்த்துமனம் பதியவொளி மவுனமாகப் பத்தியு டன் பார்த்ததினால் பலிக்குஞ்சித்தே. 1194

நூலுள்ளடக்கம்.

சித்தான சித்தெல்லா மிதிலேசொன்னேன் திறமானகருவெல் லா மிதிலேசொன்னேன், முத்தான இந்திரமயேந்திரசாலம் மூர் க்கமுள்ள ஜாலமெல்லா மிதிலேசொன்னேன், பத்தான மூப்பூவி லணந்துஞ் சொன்னேன், விஸ்தார மானமைப் போக்குஞ்சொன் னேன் வைசயமதாய் மோடியையுமாய் விளம்பினேனே. 1195

விளம்பினேன் செந்தூரம் நன்றாய்ச் சொன்னேன் விள்ளாத பற்பமெல்லாம் விளங்கச்சொன்னேன், தளம்பெறவே மேருவுடைய விபரஞ்சொன்னேன் தப்பாமல் செயநீரில் தன்மை சொன்னேன், உளங்கனிய கற்பமது விரித்துச்சொன்னேன் உண்மையுடன் வினை யாட மோடிசொன்னேன், களங்கமற அஞ்சனமு மர்த்தஞ்சொன் னேன் காயாதிக் கற்பமதைக் கருதிச்சொன்னேன். 1196

சொன்னேனே சிஷ்டைமுதல் சமாதிகற்பஞ் சுருக்கான மந்திரமு மஷ்டகர்மம், எண்ணவொண்ணா விளைதவகை நன்றாய்ச்சொன்னேன் இயல்பாக நாம்சொன்ன முறைகட்கெல்லா, முன்னமே சொன்னதொரு சூத்திரந்தான் முக்காலு நூற்றிரு பதையும்பாரு, நன்னயமாய்ப் பொருள்களெல்லாம் வெளியாய்த்தோணும் நலமான சூத்திரத்தை வெளிவிடாதே. 1197

வெளியாகச் சூத்திரத்தை வெளிவிடாதே வேதாந்த புத்தியினால் நூலைக்காரு, மொழியாக முன்சொன்ன அறுபதிலேதான் முக்கியமுள்ள கருக்களெல்லா மொழிந்து வைத்தேன், வழியாக சூத்திரமு மறுவகையும்பார்த்வால் வகைதோணுமாயிரத்திருநூறுக்குந், தெளிவாக ரெண்டையும்நீ யடக்கம்பண்ணி தேசத்தோர் கேட்டாக்கா லில்லையென்னே. 1198

இல்லையென்று ஆணையிட்டு சொல்லிப்போடு என்மகனே யென்மேலே ஆணை ஆணை, புல்லரென்ற புலையரிடம் நூல்காட்டாதே பூரணத்தைப் பற்றிமன தயிலில்நின்று, கல்லென்ற குகைதனிலே யிருந்துக்கொண்டு கருவான கருக்களெல்லா மெடுத்தாடு, தொல்லைவரும் வெளியரங்கம் பண்ணினாக்கால் சுகமாக மனதடங்கி யறிவிற்சேரே. 1199

அறிவாக மனதடங்கி மவுனமாக அப்பனே நூலெடுத்துப் பாருபாரு, குறியான குருபதத்தில் குணமாய்நில்லு குணமில்லா குணங்களிடம் கூடவேண்டாம், பரியான தங்கமடா பரப்பிர்மமாக்க பாலகனே தங்கமென்றால் பூரணமேதங்கம், நெறியான பூரணத்தைத் தினமும்நோக்கி நேரான பாரபரத்தின் சார்வாய்முற்றே.

சகல கலைக்ஞானமென்று வழங்குகிற

அமுத கலைக்ஞானம்

ஆயிரத்திருநூறு

முற்றிற்று.